### பிரேத பருவதம்.

இது தன்மி என்னும் பதிவிரதையின் சிலையே பருவதமாகி விட்டதென்று சொல்லுகிறார்கள். இப்பருவதத்தின் அடிவாரத்தில் ஒரு அழகிய குளமிருக்கிறது. அதற்கு சமீபத்தில் ஒரு இராமர் ஆலயமுண்டு. வெள்ளைக் கற்களால் விக்கிரகம் வெகு அழகாகச் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பருவதத்திற்கு நேபாள இராஜா கைபிடி சுவற்றுடன் கூடிய படிகள் கட்டியிருக்கிறார்: மலையின் மீது இராமலிங்கம் என்ற நாமத்துடன் ஒரு சிவலிங்க மிருக்கிறது. இதற்கு சமீபத்தில் ஒரு பாறையில் சுவர்ண இரேகை காணப்படுகிறது. இந்த மலையின் பேரில் பிரேதகயாவாளிகள் என்ற ஒரு வகுப்பார் இருக்கிறார்கள். இவர்கள் யாத்திரைக் காரர்களிடம் பணம் பிடுங்குவதில் அதிக சாமார்த்தியசாலிகள்.

### இராம பர்வதம்.

இது ஸாஹிப்கஞ்சுக்கு சமீபத்தில் சுமார் 130-அடி உயரமுள்ள ஒரு குன்று. இதன்பேரில் சிவமந்திரம், ராமமந்திரம் என்று இரண்டு ஆலயங்களிருக்கின்றன. அஷ்டகயா செய்யாதவர்களை இம்மலையின் மேல் விடுகிறதில்லை என்கிறார்கள். இதுவும் பணவாசையாலேயே யன்றி மற்றப்படியன்று.

### தர்மாரணியம்.

இது கயாபட்டணத்திலிருந்து எட்டுமைல் செல்லவேண்டும். இவ்விடத்தில் ஒரு ஊரும் சமீபத்தில் புவுத்ததரு என்கிற அரசமரமும் அதின் சமீபத்தில் பவுத்தருடைய கோவிலும் அதில் பல பவுத்த விக்கிரகங்களும் காணப்படுவதன்றி ஜெகந்நாதர் கோவில் எனற ஆலயமுமிருக்கிறது. வாசத்திற்கு மிகவும் ரமணியமானவிடம்.

### வட விருக்ஷம்.

இது விஷ்ணு பாதத்திலிருந்து ஒருமைல் தூரத்திலிருக்கிறது. இதற்கு சமீபத்தில் ருக்மணி குண்டம், கதாலோலம் என்கிற இரண்டு தீர்த்தங்களிருக்கின்றன. இது வெகு காலத்திய விருக்ஷமென்பதில் தடையில்லை. இதினுடைய ஆதிமரம் பட்டுப்போய் விழுதுகளால் பறந்து சுமார் ஒரு பர்லாங்கு தூரம் எட்டியிருக்கிறது. இதை சுற்றி மேடைபோட்டு சமீபத்தில் சில மண்டபங்களும் கட்டியிருக்கிறார்கள்.

### போது விஷயம்.

தேக ஆரோக்கியமானவிடம் என்று சொல்ல முடியவில்லை. ஜனங்களில் கைகால் பெருத்தவர்களும், சதா தீராத நோயால் வருந்திக்கொண்டிருப்பவர்களும் அதிகமாகக் காணப்படுகிறார்கள். கயாவாளிகள் ஒவ்வொருவரும் யாத்திரைக்காரர்களைப் பிடித்து தங்களிடம் கூட்டிக்கொண்டுவரும்படியாக பலரை தங்கள் ஏஜண்டுகளாக, பல பக்கங்களில் ஏற்படுத்தி வைத்திருக்கிறார்கள். இவர்கள் கயாவிற்கு செல்லுகிற யாத்திரைக்காரர்கள் என்று தெரிந்தால், வேண்டாமென்று தடுத்தபோதிலும், சோராமல் பின்தொடர்ந்து நயவசனங்கள் சொல்லி, கூட்டிக்கொண்டுபோய் தங்கள் முதலாளியின் விடுதியில் இறக்கி, சிரார்த்தாதி பிண்டப்பிரதானங்களுக்கு 50-100 என்பதாகப் பேசி, வேறு இடத்திற்கு யாத்திரைக்காரர்களை செல்லவொட்டாமல், உதவிக்கு ஆள் கொடுக்கிற பாவனையாக ஒருவர் அல்லது இருவரை மோகுலாகப்போட்டு காசைக் கறந்துவிடுகிறதன்றி, அஷ்ட கயாதான் செய்யவேண்டுமென்றும், கூபம் செய்யாமல் விடக்கூடாதென்றும், விஷ்ணுபாத அபிஷேகம் மகா விசேஷமானதென்றும் கூறி போதித்து, யாத்திரைக்காரர்கள் கையிலுள்ளதைக்கவா விடேன் தோடேனென நச்சுகிறார்கள். கடைசி தினமாகிய, கயாவாளிகளிடம் சுபலம் பெற்றுக்கொள்ளும் தினத்தில், வடவிருக்ஷத்தினடியிலோ அல்லது விஷ்ணுபாதத்திற்கு சமீபமான மண்டபத்திலோ பிண்டப்பிரதானங்கள் செய்தபிறகு கயாவாளிகளுக்கு பிர்ம்மகல்பித பிராமண பூசை செய்யச் சொல்லுகிறார்கள். இதுவும் நடந்தேறியவுடனே, பிதுர்தண்டனை என்பதாக ஒவ்வொருவருடைய இரண்டு கையையும் நீட்டச்சொல்லி ஒரு பூமாலையைப் போட்டு சுற்றிக்கட்டி, உங்களுடைய சம்பளமென்ன, வரும்படியென்ன, ஆஸ்தி என்னவென்று கேட்டு உறுதியாகச் சொல்லவேண்டுமென்றும், இந்த மகா க்ஷேத்திரத்தில் பொய் சொல்லுவது தகாத காரியமென்றும் கூறி, உங்களுடைய பிதுர்க்களெல்லாம் கரையேறினார்களே, அதற்கு நீங்கள் இவ்வளவுதானா கொடுக்கிறது. என் இன்னும் அதிகம் கொடுக்கக்கூடாது என்னத்திற்காக இவ்வளவுதூரம் சிலவு செய்துகொண்டு வந்தீர்கள். கயாவாளிகளை திருப்தி செய்தல்லவோ நீங்கள் போகவேண்டும், என்பதாக கல்லும் கரையும்படி பேசி சாயந்திரபவரையில் சொன்னதையே சொல்லிப் பொழுது போக்குகிறார்கள். இவர்கள் போஜனஞ்செய்துவிட்டு சால்வை, துப்பட்டா முதலிய விலைபெற்ற உடுப்புகளை யணிந்துகொண்டு வாயில் தாம்பூலம் விளங்க குதிரைவண்டிகளில் ஏறிக்கொண்டு வருகிறார்கள். பிண்டப்பிரதானஞ் செய்யவந்தவர்களுக்கோ வயிற்றில் பசி பிடுங்கித் தின்னுகிறது. இந்த அவஸ்தையில் ஏதோ தொலையட்டுமென்று கொடுக்க நேருவது சகஜமாய்விடுகிறது. பிறகு கொடுத்ததைப் பெற்றுக்கொண்டு கையில் கோர்த்த மாலையை அவிழ்த்து, முதுகைத் தட்டிக்கொடுத்து "உங்கள் பிதுர்க்கள் பரமபதத்தையடைந்தார்களே" என்று சுபலம் சொல்லுகிறார்கள். இவ்விடத்திற்கு எப்பேர்க்கொத்த தாராள சிந்தை யுள்ளவர்கள் வந்தாலும் கயாவாளிகளின் பேரில் குறைகூறுமலிரா ரென்பது திண்ணம். கடைசியில் கயாவாளிகள் யாத்திரைக்காரர்களை உபசரித்து, தங்களுடைய மேல்விலாசத்தை அவர்

களுக்குக் கொடுத்தும், அவர்களுடைய மேல்விலாசத்தைத் தங்கள் புஸ்தகத்தில் பதிவு செய்துக்கொண்டும், தாங்கள் பிரயோஜனமடைந்ததற்கு தக்கினவிதமாய், விஷ்ணுபாதம், சிரேஷ்டமான மிட்டாய் வர்க்கங்கள், கொஞ்சம் பச்சரிசி, இரண்டு மூன்று கொட்டைப்பாக்கு முதலியவைகளைக் கொடுக்கிறார்கள்.

இந்த கயாவாளிகளின் மதம் ஆசாரம் முதலியவைகளை கவனிக்கையில், தென்னிந்தியாவிலுள்ள மத்வமத பிராமணர்களை யொத்திருக்கிறார்களென்றாலும் சிற்சில ஆசார அனுஷ்டானங்களில் அதிகமாக வேறுபடுகிறார்கள். இவர்கள் பேசும் பாஷைக்கு 'மாத்தி' என்று பெயராம். இவ்விடத்தில் சிரார்த்தாதிகளை செய்யவேண்டியவர்கள் இவர்களையே பிதுர் முதலிய ஸ்தானங்களில் ஏற்படுத்த வேண்டும். இவர்கள் அந்த ஸ்தானத்திலுட்கார்ந்து போஜனஞ்செய்ய வேண்டியதாதலால், அதற்குத் தகுந்த ஆசார சுத்தத்துடன் வருகிறதில்லை. நன்றாக சாப்பிட்டு தாம்பூலமும் தரித்துக்கொண்டு குதிரைசவாரி செய்துகொண்டுவருகிறார்கள். இப்படி வந்தவுடன் தங்கள் உடைகளைக் களைந்துவிட்டு ஓர் நார்மடியை இடுப்பில் சுற்றிக்கொண்டு, பரமாரப்பட்ட இலையில் உட்கார்ந்து, பதார்த்தங்களை கையால் தொடுவதும், வாய்க்கு சமீபத்தில் கொண்டு போவதுமாயிருந்து மூன்று நிமிஷத்திற்குள்ளாக எழுந்துவிடுகிறார்கள். உடனே தக்ஷிணை கொடுப்பதைப் பெற்றுக்கொண்டு வீட்டுக்கு நேராகச் சென்று விடுகிறார்களென்று சொல்லுவதற்கில்லை, வேறு சில இடங்களுக்கும் இம்மாதிரி சென்று போஜனஞ் செய்துவிட்டுத்தான் செல்லுகிறார்கள். ஒருவர் ஒருநாளையில் பத்துப் பன்னிரண்டிடங்களில் இவ்விதம் சாப்பிட இயலுமாம். இது மகா அனாசாரமான வழக்கமென்பதை பலர் தெரிந்தும் வேறு மார்க்கமின்றி செய்ய உட்படுகிறார்கள். இந்த க்ஷேத்திரத்திலும் பல மாகாணங்களிலிருந்து வந்து சேர்ந்தவர்களாகிய பால்ய விதவைகள் அதிகமாய்க் காணப்படுகிறார்கள். இவர்கள் அநேகமாய் கயாவாளிகளிடம் வீட்டுவேலைக்கு சேர்ந்துகொண்டு அவர்களுடைய பணிவிடையிலேயே காலத்தைக் கழிக்கிறார்கள், கயாவாளிகளுடைய மனைவிமார்களோ கோஷாக்களாய் வீட்டிற்குள்ளேயே அடைபட்டு காலந் தள்ளுகிறார்கள். கடைசியில் விஷ்ணுபாதத்திற்கும் வட விருக்ஷத்திற்கும் மனப்பூர்வமாய் நமஸ்காரங்கள் செய்து முடிக்கிறோம்.

டி. சி. வெங்கடரமணய்யர்.

# வாராகோபநிஷத்.

## 5-வது அத்தியாயம்.

பகவானான ரிபுவை நிதாகர் யோகாப்பியாசவிதியைச் சொல்லும்படிகேட்டார், அப்படியே அவர் சொன்னார். தேகமானது பஞ்சபூதாத்ம சுவரூபம். ஐந்து மண்டலங்களால் * நிறைப்பப்பட்டிருக்கிறது. காடின்னியம் (கெட்டியாயிருக்கும் தன்மை) ஒன்றான பூமியைச்சார்ந்தது. திரவாகிருதி (கசிவுள்ளபாகம்) எதுவோ அதுஜலம். பிரகாசிக்கிறது (தான்) தேஜஸ் (அக்கினிபாகம்.) சஞ்சரிக்கிறது வாயுலக்ஷணம், சத்துவத்தினாலெங்கும் வியாபித்திருக்கிறது ஆகாசம். இவையெல்லாம் யோகத்தை யிச்சிக்கிறவனாலறியத்தக்கது. இந்தத்தேகத்திலே வாயுமண்டலத்தினுடைய மோதுதலினாலே இராப்பகல் இருபத்து ஓராயிரத்து அறுநூறு (21,600) சுவாசம் (உண்டாகிறது.) பிரதிவிமண்டலம் குறைந்தால் தேகத்தை யுடையவர்களுடைய தேகத்தில் மடிப்புகளுண்டாகின்றன. ஜலபாகம் குறைந்தால் கிரமமாய் நரையுண்டாகிறது.

தேஜஸ்குறைந்தால் பசியும், காந்தியும் குறைகின்றது. வாயுபாகம் குறைந்தால் எப்போதும் நடுக்கலுண்டாகிறது. ஆகாசபாகம் குறைந்தால் ஜீவித்திருக்கிறதேயில்லை. எந்தப் (பூதங்கள் குறைந்த) காரணத்தினாலே பூதங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற பிராணனானது, இளைப்பார இடமில்லாமலிருக்கையில் பக்ஷி ஆகாசத்தில் கிளம்புவதுபோல, மேலே கிளம்பிப்போகிறதோ அந்தக்காரணத்தினாலே அதுவே உட்டியானமாகிறது. அந்த விஷயத்தில் ஒரு பெந்தம் (கட்டு அல்லது தடை) சொல்லப்படுகிறது. உட்டியானபெந்தமானது மிருத்துவாகிற யானைக்குச் சிம்மமாகிறது. அதினுடைய அனுபவமானது தேகத்திலிருந்துதான், அந்தபெந்தமும் சரீரத்திலிருந்துதான், சரீரத்தில் அதைபெந்திப்பது துஷ்கரம் (பிரயாசை.) அக்கினி வயிற்றிலசைந்தால் மிகவும் வேதனையுண்டாகிறது. பசியுள்ளவனாலேயும் மலஜலபாதை

* ஐந்து மண்டலங்களாவன—மூலாதார, சுவாதிஷ்டான, மணிபூரக, அநாஹத, விசுத்திகளே.

யுள்ளவனாலேயும் (உட்டியானபெந்தம்) செய்யத்தகுந்ததல்ல. ஹிதமாயும் மிதமாயுமிருக்கிற (ஆகாரத்தை) கொஞ்சங் கொஞ்சமாய் அநேகதடவை உண்ணவேண்டியது. மிருது, மத்தியமம், மந்திரம் இவைகளிலே (இந்தக் காலங்களிலே) முறையே மந்திரயோக லயயோக அடயோகங்கள் செய்யவேண்டியது. லய மந்திர அடயோகங்கள் அஷ்டாங்கத்துடன் கூடியது. யம நியம ஆசன பிராணாயாம பிரத்தியாஹார தாரணத்தியான சமாதி என எட்டுவிதங்கள். (அவைகளில்) யமம் பத்துவிதம். அவையாவன:—பிறருக்குத் துன்பம் செய்யாமை, சத்தியம், களவாமை, பிரும்மசரியம், தயை, நேர்மை, பொறுமை, தைரியம், மிதமாயுண்ணல், சுத்தம் (தேகசுத்தம் மனச்சுத்தம்.) நியமம் பத்துவிதம். அவையாவன:—தபஸ், சந்தோஷம், ஆஸ்திக்கியம் (சுவாமி ஒருவருண்டென்னும் நம்பிக்கை, அல்லது, வேதத்தில் நம்பிக்கை), தானம், ஈசுவரபூஜை, சித்தாந்த சிரவணம் (தான் கொண்டிருக்கும் மதவிஷயமாய் தன் குருவினால் செய்யப்பட்டிருக்கிற கிரந்தத்தைக் கேட்பது), இலச்சை, நற்புத்தி, ஜபம், விருதம். சக்கிரம் முதலான பதினொரு ஆசனங்களிருக்கின்றன. (அவையாவன) —சக்கிரம், பதுமாசனம், கூர்மம், மயூரம், குக்குடம், வீராசனம், சுவஸ்திகம், பத்திரம், சிம்மாசனம், முக்தாசனம், கோமுகம், என்று யோகமறிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

இடது கணுக்காலை வலது துடையின் பேரிலும் வலது கணுக்காலை இடது துடையின் பேரிலும் வைத்துக்கொண்டு நேரான தேகத்தையுடையவனாயிருப்பது சக்கிராசனமாகிறது. பூரகம், கும்பகம், ரேசகம், அப்படியே மறுபடி பூரகம் (முதலானது) செய்யப்படுகிறது. அந்தந்த நாடிமூலமாய்ச் செய்யப்படுகிற பிராணாயாமம் நாடியென்று சொல்லப்படுகிறது. சகல ஜந்துக்களுடைய தேகமானது தொண்ணூற்றாறு அங்குலமுள்ளதாகவிருக்கிறது. அதின் மத்தியில் அபானஸ்தானத்கற்கு இரண்டங்குலத்திற்கு மேலும, மேட்டிரத்திற்கு இரண்டங்குலத்தற்குக் கீழும், மத்தியப்பிரதேசமென்று * சொல்லப்படுகிறது. மேட்டிரத்திற்கு ஒன்பதங்குலத்திற்குமேல் நாலங்குலம் நீளமும், நாலங்குல அகலமும் உள்ளதாக அண்டம் (முட்டை வடிவு) போல விருத்தமாயிருக்கிறது கந்தமென்று சொல்லப்படுகிறது. அது கொழுப்பு, ஊன், எலும்பு, உதிரம், இவைகளால் சூழப்பட்டிருக்கிறது. அவ்விடத்திலேயே பனிரண்டு ஆரமுள்ள நாடிச் சக்கரம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. எதினாலிந்த சரீரம் தரிக்கப்பட்டிருக்கிறதோ அந்தக் குண்டலீ அவ்விடத்திலிருக்கிறது. அந்தக் குண்டலியானது சுழும்னையினுடைய பிரம்மரந்திரத்தை முகத்தினால் மறைத்துக்கொண்டிருக்கிறது. சுழும்னையினுடைய (பக்கத்தில்) அலம்புஸாவும் இந்தக்குகூர்நாடியும் வசிக்கின்றன. அதற்கடுத்த விரண்டாரங்களில் வாருணா, யசஸ்விநீ, இவைகளிருக்கின்றன. சுழும்னையின் தெக்ஷிண ஆரத்தில் கிரமமாய் பிங்கலையிருக்கிறது, அதற்குப் பிறகு இரண்டு ஆரங்களில் பூஷா, பயஸ்விநீ, இரண்டிருக்கின்றன. சுழும்னையின் மேற்கு ஆரத்தில் சரஸ்வதி நாடியிருக்கிறது. அதற்குப்பிறகு இரண்டு ஆரங்களில் சங்கிநீ, காந்தாரியிருக்கின்றன. சுழும்னைக்கு வடக்கே இடா என்கிறதிருக்கிறது. அதற்கடுத்து ஹஸ்தி ஜிஹ்வா இருக்கிறது அதற்கு அடுத்து விசுவோதராவிருக்கிறது. இந்த ஆரங்களிலே பிரதக்ஷிணக்கிரமமாய் நாடிகள் பனிரண்டு வாயுக்களைச் சுமந்துகொண்டிருக்கின்றன. நாடிகள் வஸ்திரங்கள் † போலிருக்கின்றன. அவைகள் பல வருணங்களுடையனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. வஸ்திரத்தின் மத்தியபாகம் நாபி சக்கரமெனப்படுகிறது.

ஜ்வலந்தி, நாதரூபிணி, பரரந்திரா, சுழும்னா, இந்தநான்கும் இரத்தின பூரிதங்களாயிருக்கின்றன. இவைகள் நாதாதாரங்களென்று சொல்லப்படுகின்றன. பிர்ம்மரந்திரத்தினுடைய மத்திய பாகமானது குண்டலீயினால் அடிக்கடி மறைக்கப்படுகிறது. இந்தமாதிரி இந்த நாடிகளில் பத்து வாயுக்கள் சஞ்சரிக்கின்றன. இந்தப்படி நாடிகளின் மார்க்கத்தையும் வாயுக்களின் மார்க்கத்தையும் விவேகியானவன் கழுத்து, தலை, தேகம் இவைகளைச் சமமாய் வைத்துக்கொண்டும்

* இந்த மத்தியப்பிரதேசத்திற்கு மூலாதாரமென்று பெயர்.
† நூல்கள் குறுக்கும் நெடுக்குமாயிருக்கிற வஸ்திரம் போல.

வாயை மூடிக்கொண்டும் அசையாமல் மூக்குநுனியிலும் ஹிருதயமத்தியிலும் பிந்துமத்தியிலும் தூரியகத்தை (ஆத்மாவை)த் தியானம்செய்து அதிலிருந் துண்டாகிற அமிருதத்தைச் சமாதானமான சித்தமுடையவனாகி விருந்து நேத்திரங்களால் பார்க்கவேண்டியது. அபானத்தை மூடிக்கொண்டு வாயுவை மேல்கிளப்பி பிரணவத்தினாலே மேலேயெழுப்பி ஸ்ரீபீஜத்தினால் நிவர்த்திக்கவேண்டியது. தன்னுடைய ஆத்மாவை ஸ்ரீயாக தியானம் செய்யவேண்டியது. பிறகு அமிருதத்தினால் நனைக்கப் பட்டதாகத் தியானிக்கவேண்டியது (என்றால், ஆநந்தானுபவத்தை யடையவேண்டியதென்று கருத்துக் கொள்ளலாம்.) இது காலவஞ்சனம் எந்தச்சாதனத்தினால் மனதில் சிந்திக்கிறகாரியம் மனதினாலேயே சித்தியாகிறதோ அப்பேர்ப்பட்டது இந்தக் காலவஞ்சனம். சகலத்திலும்இது முக்கியமானது. ஜலத்தில் அக்கினி சுவலிக்கும், அக்கினி சுவாலையில் கிளைகளும் தளிர்களு முண்டாகின்றன. ஜகத்தைக்குறித்துச் சொன்னவார்த்தைகளும் செய்தகாரியங்களும் வீணாகாது. மார்க்கத்தில் பிந்துவைத்தடுத்து அக்கினியை ஜலத்தில் சுவலிக்கச்செய்து, அந்த ஜலத்தை வற்றச் செய்தால் காயம் திருடமாகிறது. குதயோனிகளை ஒரேகாலத்தில் சுருக்கிக்கொள்ளுகிறான். அபானனை மேல் நோக்கச்செய்து இத்துடன் சமானனைச் சேர்க்கவேண்டியது. தன் ஆத்மாவைச் சிவனாகத் தியானித்துப் பிறகு அமிருதத்தினால் நனைக்கப் பட்டதாகத் தியானிக்கவேண்டியது. ஒவ்வொரு ஆபாகத்தினுடைய மத்தியில் பெலத்தை ஆரம்பிக்க வேண்டியது. பிராணபான சேர்க்கையினாலே மேலேபோகப் பார்க்கவேண்டியது. இந்தச் சிரேஷ்டமான யோகமானது தேகத்தில் சித்திமார்க்கத்தைப் பிரகாசப்படுத்துகிறது.

ஜலத்திலிருக்கிற அணையானது பிரவாகத்திற்குத் தடையாயிருப்பதுபோல (சரீரத்தை யடைந்திருக்கிற பிரதிபிம்பனாகிய ஜீவனுக்குத் தேகத்தை சர்வவியாபகத்திற்குத் தடையாக அறியவேண்டியது.) சரீரத்தின் சாயையை அறியவேண்டியது. இந்தப் பெந்தமானது எல்லா நாடிகளுக்கும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பெந்தத்தினுடைய பிரசாதத்தினால் தேவதை பிரத்தியக்ஷமாகிறது. இந்த சதுஷ்பதபெந்தமானது மூன்று மார்க்கங்களைத் தடுக்கிறது. சித்தர்கள் எதினால் சித்தியைப் பெற்றார்களோ அந்த ஒருமார்க்கத்தைப் பிரகாசிப்பிக்கிறது. பிராணனுடனே கூட உதானனைச் சீக்கிரமாக மேல்நோக்கச்செய்தால் இந்தப் பெந்தமானது சகல நாடிகளையும் தடுத்துக்கொண்டு மேலேபோகிறது. இதுசம்புடயோகமென்றும் மூலபெந்தமென்றும் சொல்லப்படுகிறது. இந்த ஒரு அப்பியாச யோகத்தினாலேயே மூன்றுபெந்தமும் சித்திக்கிறது. இடைவிடாமல் இராப்பகலாவது அல்லது எப்போதெப்போது அனுகூலப்படுகிறதோ அந்த ஜாமத்திலாவது, செய்யும் அப்பியாசத்தினால் வாயு சுவாதீனப்பட்டதாக ஆகும். வாயுசுவாதீனமானால் தேகத்தில் அக்கினியானது நாள்தோறும் விருத்தியாகும். அக்கினிவிருத்தியானால் அன்னாதிகள் சுகமாக ஜீரணமாகும். அன்னம் சரியாய் ஜீரணமானால் இரஸவிருத்தியாகிறது. இரஸவிருத்தியானால் தாதுவிருத்தியாகிறது. தாதுவிருத்தியினாலே சரீரத்தில் ஞானவிருத்தியாகிறது. அநேககோடி ஜன்மங்களில் சேர்க்கப்பட்ட சகல பாபங்களும் எரிக்கப்பட்டுப் போகிறது. குதத்திற்கும் மேட்டிரத்திற்கும் மத்தியில் முக்கோணமான மூலாதாரமிருக்கிறது, அதானது குண்டலீ என்கிற பராசக்தி எவ்விடத்திலிருக்கிறதோ அந்த பிந்துரூபமான சிவனுடைய ஸ்தானத்தைப்பிரகாசிப்பிவிக்கிறது. அந்த ஸ்தானத்தி லிருந்து வாயுவுண்டாகிறது. அந்த ஸ்தானத்திலிருந்து அக்கினி விருத்தியடைகிறது. அந்தஸ்தானத்திலிருந்து பிந்து உற்பத்தியாகிறது. நாதம் விருத்தியடைகிறது. அந்தஸ்தானத்திலிருந்து (ஹம்ஸ:) அம்சனுற்பத்தியாகிறான். அந்த ஸ்தானத்திலிருந்து மனது உற்பத்தியாகிறது. மூலாதாரம் முதலான * ஆறுசக்கரங்கள் சக்திஸ்தானமென்று சொல்லப்படுகின்றன. கழுத்துமுதல், தலையுச்சிவரையில் சம்புவினுடைய ஸ்தானமென்று சொல்லப்படுகிறது.

நாடிகளுக்கு ஆசிரியம்தேகம். பிராணனுக்கு நாடிகள் ஆசிரியம். ஜீவனுக்கிருப்பிடம் பிரா-

* ஆறுசக்கரங்களாவன—மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை.

னன். ஜீவன் ஹம்சனுக்கு ஆசிரியன். ஹம்சன் சக்திக்கிருப்பிடமாயும் சராசர ஜகத்தாயுமிருக்கிறான். விகற்பமற்றவனாயும் தெளிவான மனதுடையவனாயு மிருந்து கொண்டு பிராணாயாமத்தை யப்பியாசம் செய்யவேண்டியது. செம்மையாய் மூன்று பெந்தங்களையும் அனுஷ்டிக்கிறவனுங்கூட லக்ஷிய லெக்ஷணகாரணமாயிருக்கிற அறியத்தகுந்த வஸ்துவை சத்தியத்தோடு கூடின மனதை யுடையவனைப் எப்போதும் அறிய முயலவேண்டியது. இரேசகம் பூரகமிரண்டையும் கும்பகத்தில் நிறுத்த வேண்டியது. காணப்படுகிறதாகவும் லக்ஷிய வஸ்துவாகவு மிருக்கிற பிர்ம்மத்தினிடத்தில்தான் ஆசிருதனை விருக்கவேண்டியது. வெளிவிஷயங்களெல்லாம் ரேசகமென்று சொல்லப்படுகிறது. சாஸ்திரவிக்ஞானம் பூரகமென்றும் சாஸ்திர விக்ஞானத்தை தனக்குள்ளேயே யடக்குவது கும்பகமென்றும் சொல்லப் படுகிறது. இப்படி அப்பியாசம் செய்கிற சித்தமுடையவனால் அவன் முக்தனே. இதில் சந்தேகமில்லை. கும்பகத்தினால் எப்போதும் ஏற்றி கும்பகத்தினாலேயே நிறப்பவேண்டும். கும்பகத்தினாலேதான் கும்பகத்தை ஸ்திரப்படுத்தவேண்டும். அதற்குள் பரமசிவமிருக்கிறது. இப்படிப்பட்ட அவஸ்தையில் அசையாமலிருக்கிற வாயுவை, கண்ட முத்திரையினாலே கலைத்துவிடவேண்டும். வாயுவினுடைய கெதியைத் தடுத்து பூரக கும்பகங்களை அப்பியாசத்திற்குக் கொண்டுவந்து இரண்டு கைகளையும் இரண்டு கால்களையும் பூமியில் சமமாயூன்றி மூன்றுவேதக சம்பந்தத்தினாலே வாயுவினால் சதுஷ்பீடத்தைத் தட்ட வேண்டும். வாயுவின் முகத்திலிருக்கிற பிறகோடிகளினாலே மகாமேருவை தட்டவேண்டும். இரண்டுபுடத்தை இழுத்து காற்றானது பிரகாசிக்கிறது. அமிருதத்தின் பொருட்டு சந்திர சூரிய அக்கினிகளுடைய சேர்க்கையை யறியவேண்டியது, மேருஸ்தானம் அசைவதினால் மேருவின் நடுவிலிருக்கிற தேவதைகள் சஞ்சரிக்கிறார்கள். முதலில்இவனுடைய பிரும்ம கிரந்திலிருந்து சீக்கிரமாக ஒருதுவார முண்டாகிறது. பிறகுஇவன் பிரும்மகிரந்தியைப் பிளந்து பிறகு விஷ்ணுகிரந்தியைப் பிளக்கிறான். பிறகு ருத்திரகிரந்தியைப் பிளந்து பிறகு அப்படியே மோகமலத்தைப் போக்கடித்தும் அநேக ஜன்ம ஸம்ஸ்காரத்தினாலேயும் குருதேவதைகளுடைய பிரசாதத்தினாலேயும் யோகாப் பியாசத்தினா லேயும் அந்த யோகிக்கு வேதமுண்டாகிறது.

இடைபிங்களைகளின் மத்தியிலிருக்கிறசுழுமுனாடி மண்டலத்தில் முத்திராபெந்தமென்கிற விசேஷத்தினால் வாயுவை மேல்நோக்கச் செய்யவேண்டியது.. பிரணவத்தைக் குறிக்கி உச்சரிப்பது பாபங்களைப் போக்கடிக்கிறது. தீர்க்கமாயுச்சரிப்பது மோக்ஷத்தைக்கொடுக்கிறது. அப்பியாயன சுவரத்திலாவது புளுக சுவரத்திலாவது உச்சரிப்பதும் மோக்ஷத்தைக் கொடுக்கிறது. இந்த மூன்றுவித உச்சரிப்பினால் இடைவிடாத எண்ணெய் தரைபோலவும் தீர்க்கமான கண்டநாதம் போலவும் வாக்குக்கெட்டாததா யிருக்கிற அந்தப் பிரணவத்தின் நுனியை எவன் அறிகிறானோ அவன் தான் வேதத்தை யறிந்தவன். குறுகலான சுவரம் பிந்துவிலிருக்கிறது, தீர்க்கசுவரம் பிர்ம்மரெந்திரத்திலிருக்கிறது. புளுதம் துவாதசாந்தத்தி லிருக்கிறது. மந்திர சித்தியின் பொருட்டு மந்திரத்தை ஜபிக்கவேண்டியது. இந்தப் பிரணவமானது சகல தடைகளையும் நிவருத்திருக்கும். சகல பாபங்களையும் போக்கடிக்கும். இதற்கு ஆரம்பம், கடம், பரிச்சயம், நிஷ்பத்தி என்று நான்குபூமிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. கரணத்திரயங்களினால் (மனோவாக்குகாயம்) செய்யப்பட்ட வெளிக் கருமத்தைவிட்டு எப்போதுமான சிககருமம் செய்கிறானோ அது ஆரம்பமென்று சொல்லப்படுகிறது. வாயுவானது மேற்புறத்தில் துவாரப் செய்துகொண்டு ரொம்பி எங்கே ஸ்திரமாயிருக்கிறதோ அது கடமென்கிற பூமிகையென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது. சரீரம் அசையாமலிருக்கையில் ஜீவனோடு கூடியதுமல்ல ஜீவனோடு கூடாததுமல்லாத எந்த அவஸ்தையில் வாயுவானது உறுதியாய் ஆகாசத்திலிருக்கிறதோ அது (பரிச்சயம்) பிரசயபூமிகை. எந்த அவஸ்தையில் ஆத்மாவினால் சிருஷ்டி லயங்களுண்டாகிறதோ, எந்தத் தெசையில் ஜீவன் முக்தியடைந்த யோகியானவன் பிரயாசையன்றி யோகத்தைச் செய்கிறானோ அது நிஷ்பத்தி பூமிகை என்று சொல்லப்படுகிறது. *

* இந்த ஐந்தாவது அத்தியாயம் யோகசம்பந்தமானது. அதிலுள்ள விஷயங்களைக் குருமுகமாயறிந்து யோகாப்பியாசம் செய்தவன்தான் விளக்கிக்காட்டக்கூடும். மற்றவன் சக்தனல்ல வாகையால் உள்ள வர்க்கியங்களுக்கு மொழி பெயர்ப்பு மட்டும் செய்யப்பட்டிருக்கிறது.

இந்த உபநிஷத்தை அத்தியயனம் செய்கிறவன் அக்கினியைப்போல் பரிசுத்தனாகிறான். வாயுவைப்போல் பரிசுத்தனாகிறான். சுராபான பாபத்திலிருந்து விடுபடுகிறான். சுவர்ணத்தைத் திருடின பாபத்திலிருந்து விடுபடுகிறான். ஜீவன் முக்தனாகிறான். இது இருக்கினால் சொல்லப்பட்டிருக்கிறது. (அதாவது.)

(ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.)

---

## "NATION BUILDING" AND "UNIVERSAL BROTHER-HOOD"

## ஜாதி யொருமையும் சகோதர வாஞ்சையும்.

### I.

"எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்பது ஒரு பழமொழியென்றும் அதனுண்மை யின்னதென்றும் இவ்விவேகசிந்தாமணியில் எடுத்துக்காட்டியுள்ளோம். அன்றியும் அடிக்கடி ஆத்மதத்துவங்களையும் தேகதத்துவங்களையும் பற்றி நம முன்னோர் வழிபட்டும் இக்காலத்து மேற்றிசையார் சாஸ்திரஞான ஆராய்ச்சி வழிபற்றியும் அடிக்கடி யெழுதியுள்ளோம். நாம் ஸத்குரு வழிப்பட்டு சன்மார்க்கநிலை பற்றிப் பிரகிருதி தர்மங்களை உள்ளபடி யெடுத்துரைத்தது சலன புத்தியைவிட்டுச் சித்தத்தை நிறுத்திப் பார்க்கும் சக்தியில்லாதவர்களுக்கு "மதவிஷயத்தைப்பற்றி யென்னவோ எழுதி வருகிறதாக"ப்பட்டது. உண்மையறியமாட்டாமல் பலர் பலவாறு பேசிவந்தார்கள். அத்யாத்மதாபம் மேற்கொண்டவர்களிலனேகர் நாமெழுதினவற்றைக் கொண்டாடி, அனுபவிகளுக்கின்றி மற்றவர்களுக்குத் தோன்றாத இரகசியங்கள் பலவற்றைச் சுருதியுக்தியனுபவமூன்றும் பொருந்த வெளியிடக்கூடிய அளவிற்கு வெளியிட்டெழுதியதற்காக மிகவும் வந்தனம் பாராட்டி மேன்மேலு முண்மையை யுணர்ந்துய்ய ஆசைப்பட்டுழைத்தார்கள். உண்மையை உள்ளபடி யுணர்ந்தாலன்றி உண்மையின் திரிபான இப்பிரபஞ்சத்தை யுணரமுடியாது. இந்த மனோதர்மத்தை யொட்டியே எல்லாரும் உழைக்கவேண்டும். நாம் (Character-Building) ஸத்குணசம்பத்துப் பெறுவதைப்பற்றி யெழுதிவந்தோம். இப்பொழுது மிஸ்ஸஸ் அனிபெஸண்ட் (Nation-Building) "ஜாதியொருமைப்பாடு" என்பதைப்பற்றி "இந்தியன் ரிவியூ" என்னும் ஆங்கிலேய பாஷாப் பத்திரிகைக்கு எழுதியிருப்பதில் ஒரு தேசத்திலுள்ள ஜனங்கள் ஒருமைப்பட்டு ஒரு ஜாதியாராக (Nation) விளங்குவது எப்படியென்று காட்டியிருக்கிறார்.

"நேஷன்" என்று சொல்லும் ஜாதியொருமைப்பாடு உண்டாய் வளர்ந்து விர்த்திக்கு வர அவசியமானவை மூன்று. இம்மூன்றும் இன்றியமையாதன என்கிறார். அவை:—(1) வாசத்துக்கு வசதியானதும் அந்நியர் படையெடுப்பினின்று பாதுகாக்கப்படக்கூடியதுமான தேசவிஸ்தீரணம் முதலியவையும். (2) இரண்டாவது அந்த தேசத்தில் வசிப்பவர்களெல்லாரும் பொதுவாய் மதித்துக் கொண்டாடத்தக்க பூர்வீக மகிமையொன்று இருக்கவேண்டும். (3) மூன்றாவது எல்லாரும் பொதுவாய் விரும்பத்தக்கதும் பொதுவாயனுபவிக்கத்தக்கதுமான வருங்கால மேன்மையொன்றிருக்கவேண்டும். இந்த மூன்று நிபந்தனைகளும் கூடியிருந்தாலன்றி ஜாதியொருமைப்பாடு ஏற்பட்டு விளங்காது. இம்மூன்றும் கூடியிருக்கும் பக்ஷத்தில் ஜனங்களுடைய சத்குணசம்பத்து (Character) விர்த்திப்படைய அடைய அவர்களிடத்து ஒத்துமைக்குணமும் ஒருமைப்பாடும் அதிகப்பட்டு ஒரு தேசமுழுவதுமுள்ள ஜனங்கள் ஒரு குடும்பம் போலும் ஒன்றுபட்டு வாழலாம் என்பது சரித்திர வாயிலாயறியு முண்மை. இவர் இங்கே வற்புறுத்துவது சமஷ்டி வியஷ்டி பாவம் என்பதாக அறியத்தக்கது. வியஷ்டி பாவம் (Individuality) நன்றாக விளங்கினாலன்றி சமஷ்டி பாவம் (Cellectivity) நன்றாக விளங்காது.

இந்தியாபலவேறுபட்ட ஜாதிகளால் பிரிவுண்டிருப்பதால்இந்தியா ஒருமைப்பட்ட ஜாதியாக விளங்குவது அசாத்தியமென்று நம்மை ஒன்றுபடவிடாது கலைத்து நம் வேற்றுமையினால் தங்கள் அதிகாரத்தை நீடித்திருக்கச் செய்ய விரும்புகிறவர்கள் சொல்கிறார்கள். அப்படிச் சொல்வது ஸ்வயநயம் பாராட்டிச் சொல்லும் வஞ்சகச்சொல். அதைக்கேட்டு நாம் மதிமயங்கக்கூடாது. பூர்வத்தில் இத்தலி தேசத்தைப்பற்றி இப்படியே சொல்லிவந்தார்கள். அத்தேசத்தில் தத்துவ ஆராய்ச்சி செய்து உண்மையுணர்ந்து உண்மைவழிப்பட்டு நடக்கும் உத்தமர்கள் சிலர் உதிக்க, அவர்கள் ஆதரவினால் ஜனங்கள் ஒருதலைப்பட்டு ஐக்கியமத்தியம் பெருகி இப்பொழுது ஒன்றுபட்ட ஜாதியாராக வாழ்ந்து வருகிறார்கள். ஜாதிகள் பலவேறுபட்டிருந்தாலென்ன, தேசாபிமானம் என்னும் உண்மைக்குணம் ஒன்றுமட்டும் உதித்ததானால் சில்லரை வேற்றுமை வித்தியாசங்களெல்லாம் அதில் முழுகிப்போம். இப்பொழுது ஒருமைப்பட்ட ஜாதியாராக விளங்கும் பிரிடிஷ ஜாதியர் பலவேறுபட்ட ஜாதிகள் சேர்ந்து விளங்கவில்லையா? ஸாக்ஸன், நார்மன், டேன் முதலிய பல ஜாதியர் ஒன்றுபட்டு இப்பொழுது வித்தியாசமின்றி விளங்கவில்லையா? அப்மாதிரியாகவே ஹிந்து, முஸ்லிம், பார்ஸி முதலிய எல்லாரும் ஸ்வதேசாபிமானம் மேற்கொண்டு ஜனனபூமியாம் ஸ்வதேச மாதாவை ஒன்றுபட்டுப் பூசித்து ஒருமைப்பட்ட ஜாதியாக விளங்கலாம். அதற்கு வேண்டிய மூன்று அம்சங்களும் பொருந்தியிருப்பதால், அந்த அருமையான நிலைமையை அடைய நாம் செய்யவேண்டியதென்ன?

முதலாவது அஹம்விருத்தி வேண்டியது:— நான் ஹிந்து, நான் முஸ்லிம், நான் பார்ஸி, நான் கிறிஸ்தவன் என்கிற மதவேறுபாட்டினாலுண்டான பேத பாவம் மேலிட்டிருப்பது போய், ஹிந்து, முஸ்லிம், பார்ஸி, கிறிஸ்தியன் ஆகிய எல்லாருக்கும் "முதலில் நான் இந்தியன் அப்புறம்தான் மற்றதெல்லாம்" என்கிற எண்ணம் உண்டாகவேண்டும். எல்லா மதத்துக்கும் பொதுவாயுள்ள ஆத்ம தத்துவ தேகதத்துவங்களை யுணர்ந்து அனுஷ்டித்தாலன்றி மதவேறுபாடுகளின் வேற்றுமையிலுள்ள ஒற்றுமை விளங்காது. வேற்றுமையிலுள்ள ஒற்றுமை விளங்க முதற்கொள்கைகளையும் மூலதத்துவங்களையும் நன்றாக அறிந்து மனதில் கிரகிக்கவேண்டும். இதற்கு தத்துவ விசாரமும் அதனால் வரும் விவேகமும் அவசியம். முதற்கொள்கைகளும் மூலதத்துவங்களும் ஸத்தியத்தில் வேரூன்றி ஸத்தியத்தை ஆதாரமாகக் கொண்டிருப்பதால் ஸத்திய புத்தியின்றி அவைகளின் உண்மைகளையறிய முயலுவது ஆகாசத்தில் கோட்டை கட்டுவதற்கொப்பாகும்; ஆகையால் ஜாதியொருமைப்பாடுதித்து வளரப் பாடுபடுபவர்களில் புத்திசாலிகளானவர்கள் தத்துவவிசாரம் செய்து ஸத்தியவிரத மனுஷ்டிக்கவேண்டும். கனம் மிஸ்டர் கோக்லே ஏற்படுத்தியிருக்கிற (Servants of India Society) இந்தியா சேவைச் சங்கம் என்பதின் உட்கருத்து இதுவே. இது "அஹம்விருத்திக்கு ப்பரசேவை அவசியம்" என்று நாம் வற்புறுத்திக் கூறின உண்மையையே பின்னும் அனுஷ்டானத்தில் வற்புறுத்திக் கூறுவதாயிருக்கிறது.

அஹம்விருத்தியால் பரசேவையும், பரசேவையால் அஹம் விருத்தியுமடைந்த உத்தமர்கள் ஜாதியொருமைப்பாட்டிற்கு அவசியமான உண்மைகளைப்பற்றிப் பிரசங்கித்துப் பேசியும் பத்திரிகைகளில் எழுதியும் வரவேண்டும். இதனால் அந்த எண்ணங்கள் எல்லார் மனதிலும் பதிந்து சாதாரண ஜனங்களும் அவைகளைப்பற்றிய உண்மைகளை மனதில் வாங்கிக்கொள்ளத் தக்க வசதியேற்படவேண்டும். இதனால் தேகத்திலும் மனதே முக்கியகாரணம் என்பது தரைத்தன விஷயத்திலுமுண்மையென்று ஏற்படுகிறது. இத்தலி, ஜர்மனி முதலிய தேசங்களில் என்ன அக்ரமயங்கள் நடந்துகொண்டிருந்தலும் அத்தேசத்துக் கிரந்த கர்த்தாகளும் கவிகளும ஜர்மனியைத் தங்கள் பிதிர்ராஜ்ஜியமாகப் புகழ்ந்து பாடியும் பேசியும் வந்தார்கள். மனம் பகுவப்பட்டால்தான் பிறகு தேகம் பகுவத்துக்கு வரும். அவ்வாறே இந்தியாவிலும் செய்யவேண்டுமென்று மிஸ்ஸஸ் பெஸன்ட் வற்புறுத்திக் கூறுகிறார். அவர் கருத்து இது:—

"இந்தியாவில் எங்கும் இந்தியாவை ஸ்வதேச மாதாவாகப் பூஜிக்கும் மனப்பழக்கம் ஏற்படவேண்டும்.'' இது நமக்குப் புதிதல்ல. "பாரதமாதா'' ஜகத்ஜநநீயின் முக்கியாம்சம் என்று நமது முன்னோர்கள் நமக்குப் போதித்திருக்கிறார்கள். இப்பரதக் கண்டத்தை க்ஷேத்திரமாகவும் பாரதமாதாவை க்ஷேத்ரக்ஞசக்தியாகவும் வைத்தே ஸ்தலபுராணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இத்தேகத்தில் ஷடாதாரங்களும் த்வாதசாந்தமும் ஏற்பட்டிருப்பதுபோல, இந்தியாவை பாரதமாதாவின் தேகமாக்கி அதற்கு ஷடாதாரங்களும் துவாதசாந்தமும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்த வழியில் நாம் புதிதாய்க் கற்றுக்கொள்ள வேண்டியது ஒன்றுமில்லை. மூலக்கொள்கைகளும் தத்துவங்களும் ஏற்கனவே ஏற்பட்டிருக்கின்றன. அவற்றை மறந்து அந்நியர் பேச்சைக் கேட்டு அவற்றை யிகழ்ந்து ஸ்வதேசப்பிரஷ்டராய்ப்போன பாபம்தீர, அதற்குப் பிராயச்சித்தமாய் ஸ்வதேசப்பற்று மேற்கொண்டு, விதேசக விபரீதங்களை அறவே விட்டொழிக்க வேண்டியது. இதனால் அந்நியர்களை நாம் வெறுக்கவேண்டுமென்பது கருத்தல்ல. "வர்மமப்பா வெல்வதில்லை''—வர்மம் சாதித்துச் சாதனை புரிந்து தேறினவர்கள் ஒருவருமில்லை. வர்மம் விஷத்துக்கு சமானம். அந்நியர்களை ஆத்ம சகோதரர்களாகப் பாவித்து அவர்களையும் நம் வழிக்குக் கொண்டுவர வேண்டும். அது சாத்தியமில்லாத பக்ஷத்தில் அவர்களிடத்திலுள்ள குணங்களைக் கிரகித்து அவற்றை நம் ஸ்வதேசிய ஸ்வஜாதீய ஒற்றுமைக் கேற்கவும் புராதனமான நம் உண்மைக் கொள்கைகளுக்கு ஒப்பவும் அங்கீகரித்தனுஷ்டிக்கவேண்டும். பிரிடிஷ் கவர்ன்மெண்டு அந்நிய கவர்ன்மெண்டல்ல. நம் சொந்த கவர்ன்மெண்டை நமது சம்மதத்தினாலேயே அவர்கள் கைக்கொண்டு ஆண்டுவருகிறார்கள். "வீடு இரண்டுபட்டால் கூத்தாடிக்கெளிது'' என்பதுபோல் நாம் ஒற்றுமை யிழந்து கிடப்பதால், அதிகார ஸ்தானத்திலுள்ள அந்நியர்கள் நம்மை அவமதித்துஎளிதில் நம் ஸ்வதந்திரங்களைப் பறித்துக்கொண்டு நம்மை அடிமைகள்போல் நடத்துகிறார்கள். நம்மிடத்தில் ஒற்றுமை யேற்பட்டால் அவர்கள் வழிக்குத் திரும்பிவிடுவார்கள். இந்த ஒற்றுமை யேற்பட உழைப்பவர்கள் பாமரஜனங்கள் மனதுக்கிசைய நடந்துகொள்வது சாத்தியமல்ல. அவர்கள் மனதைச் சின்னத்தனத்திலிருந்தும் பெரிய தனத்துக்குக் கொண்டு வரவேண்டும். இது முதலில் அவர்களுக்கு வெறுப்பாகவேயிருக்கும். அவர்கள் வெறுப்புக்கு பயந்து நடந்தால் உத்தமகாரியம் பலியாது. "தீண்ணைக்குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றே வல்செய்யின் பிடிபடுக்கப் பட்டகளிறு.''—சகோதரவாஞ்சையின் அவசியத்தைப் பற்றி ஸர் வில்லியம் வெட்டர்பர்ண் எழுதியிருப்பதைப் பின்னொருகால் பிரஸ்தாபித்தெழுதுவோம்.

---

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(From Shakespeare).

## ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

காக்ஷி. 4

{ இடம்:— ராணியின் அந்தப்புரம்.
{ காலம்:—நடுநிசி.

(ராணியும் புலஸ்தியவர்மாவும் வருகிறார்கள்.)

புலஸ்தி:—அவர்கள் இதோ வந்துவிடுவார்-நான் தங்களுக்கு ஒன்று சொல்லுகிறேன். அவரிடத்தில் கொஞ்சங்கூட தாக்ஷிண்யமே பார்க்காதேயுங்கள். அவரிடத்தில் வெளிப்படையாய் அழுத்தர் திருத்தமாய் கண்டித்துப் பேசுங்கள்-ராஜா அவங்கள் அவரிடத்தில் வைத்திருந்த கோபத்துக்கு தங்களுடைய சிபார்சில்லாவிட்டால் இந்நேரம் அநர்த்தமாகி இருக்கும் என்று சொல்லுங்கள்-நானும் இதோ இப்படி மறைவிலிருக்கிறேன்-அவுரை இலகுவில் விடாதேயுங்கள்.

ஹேமசந் :—(உள்ளிருந்து) அம்மா! அம்மா!

ராணி :—அதெல்லாம் சந்தேகப்படாதேயுங்கள், எனக்குத் தெரியும்; அவன் குரல் அதோ கேட்கிறது, நீங்கள் போங்கள் (புலஸ்தியவர்மா ஒளிந்துகொள்ளுகிறான்.)

(ஹேமசந்திரஸிங் வருகிறான்.)

ஹேமசந் :—எனம்மா கூப்பிட்டாயாமே?

ராணி :—நீ உன் தந்தைக்கு மிகவும் அபசாரம் செய்துவிட்டாய்.

ஹேமசந் :—நீ என் தந்தைக்கு மிகவும் அபசாரம் செய்துவிட்டாய்!

ராணி :—நில்லு, நில்லு, நான் கேட்பதைத் தெரிந்துகொள்ளாமல் பதில் சொல்லுகிறாயே.

ஹேமசந் :—போ, போ, நான் சொல்வதைத் தெரிந்துகொள்ளாமல் கேட்கிறாயே!

ராணி :—என்னடா இது!

ஹேமசந் :—என்னடீ அம்மா!

ராணி :—நான் யார் என்பதை மறந்துவிட்டாயா என்ன?

ஹேமசந் :—மறக்க வேண்டுமென்று பார்த்தாலும் முடியவில்லையே! நீதான் ராணி உன் புருஷனுடைய தம்பியின் மனைவி-நீ எனக்குத் தாயாக இருப்பது என் குற்றமல்ல.

ராணி :—நல்லது, நீ துடுக்காகப் பேசுகிறாய் உன்னுடன் பேசக்கூடியவர்களைக் கொண்டு பேசச் சொல்லுகிறேன்.

ஹேமசந்:—என்ன, இப்படி சொல்லிவிட்டுத் தப்பித்துக்கொண்டு போய்விடலாமென்று நினைக்கிறாயோ? எங்கேயும் போகாதே அப்படிதானே உட்காரு! உன் உண்மையான சுபாவத்தைக்கண்ணாடியில் பிரதிபிம்பம்போல் நான் உனக்குக் காண்பித்த பிறகு நீபோகலாம்.

ராணி:—நீ என்னை என்னசெய்யப் போகிறாய் கொல்லப் போகிறாயாஎன்ன? அப்புறம் ஐயையோ என்று கூவுவேன்! ஐயையோ!

புலஸ்தி:—உள்ளிருந்து ஐயையோ, அநியாயம் கூ! கூ!

ஹேமசந்:—(கத்தியைஉருவிக்கொண்டு) அகப்பட்டுக்கொண்டாயா! அதோபார் ஒரு எலி ஓடுகிறது! இன்றைக்குத் தொலைந்தாய் நீ! (என்று திரையில்குத்துகிறான்) இதோடு சனிவிட்டது.

புலஸ்தி:—(உள்ளிருந்து) ஐயோசெத்தேன்' பிராணன் போச்சுது! (கீழே விழுந்துசாகிறான்)

ராணி:—ஐயையோ, என்னடா செய்துவிட்டாய்

ஹேமசந்:-என்னவோ எனக்குத்தெரியாதே! ராஜா அவர்கள் அங்கேபதுங்கி இருந்தார்களா என்ன?

ராணி:—இதென்ன அக்கிரமான வேலைசெய்தாயே! கொஞ்சங்கூட யோசனையில்லாமல் ஒருசொலை செய்துவிட்டாயே!

ஹேமசந்:—என்ன அம்மா, அரசனையும் புருஷனையும் கொன்றுவிட்டு அவன் தம்பிக்கு வாழ்க்கைப் படுகிறதைவிடக் கெட்டுப்போய்விட்டதா என்ன இது?

ராணி:—புருஷனைக் கொல்லுகிறதா!

ஹேமசந்:—ஆம் அம்மா, அப்படித்தான் சொன்னேன்! என்னை விழித்துப் பார்க்கவேண்டாம் (திரையைத் தூக்கிவிட்டுப் புலஸ்தியவர்மாவைக் காண்கிறான்) அடேமடையா, புத்திகெட்ட திருதிருத்தகிழவா, நீயாஅகப்பட்டுக்கொண்டாய்! உன்னைவிட உயர்ந்த பதவியிலிருப்பவனுக்குச் செய்யவேண்டிய மரியாதையை உனக்குச் செய்துவிட்டேன்! இருந்தாலும் பாதகமில்லை-இனிமேலாவது அதிகப்பிரசக்கித்தனம் கூடாதென்று தெரிந்ததா? என் இப்படி வீணாய் சந்துபொந்திலெல்லாம் போய் தலைஇட்டுக்கொண்டாய்? கர்வம்பெல்லாம் உனக்கேன்? இப்படி யாராவது வேலியில்போகிற ஓணானை எடுத்துக் காதில் விட்டுக்கொண்டு பிராணனை விடுவார்களா? உன்புத்தி அவ்வளவுதான்-உனக்கவ்வளவுதான் பிராப்தி. சும்மா உட்காரம்மா, பயப்படாதே, கையைப் பிசையவேண்டாம் நான் உன் மனதைப் பிசையப்போகிறேன்! அதிலேதாவது திரவம் இருக்கிறதா அல்லது கல்லாகப்போய்விட்டதா என்றுப் பார்க்கவேண்டும்! அதில் கொஞ்சமாவது ஈரப்பசை இருந்தால் அதை வேறுருபமாக மாற்றலாம்·இல்லாவிட்டால் அப்படியே விட்டுவிடவேண்டியதுதான்.

ராணி :—நான் என்னடா செய்துவிட்டேன்? என்ன என்னவோ இல்லாதவார்த்தைஎல்லாம் பேசுகிறாயே!

ஹேமசந் :—நான் அதைச்சொல்லவும் வேண்டுமோ? அதைப்பற்றிப்பேச வாய்கூசுகிறது! மானமுள்ளபெண்பிள்ளை காதினால் கேட்க நாணுவாள்-'பதிவிரதைபயப்படுவாள்.

மாலையிட்ட மணவாளனை ஜ்வாலையிலிட்டாயே அக்கினி சாக்ஷியாய்ச்செய்த சத்தியமெல்லாம் குடிகாரனுடைய் சத்தியம் போலாச்சுதே! நீ செய்யும் பக்திஎல்லாம் வெளிவேஷமாய்ப் போச்சுதே! கையிலெடுப்பது ஜபமாலை பக்கத்திலிருப்பது கன்னக்கோலா? சூரியசந்திர நக்ஷத்திரங்களெல்லாம் இந்த ராஜ்யத்தைக் குனிந்துப்பார்க்க வெட்கப்படுகிறார்களே!

ராணி:—என்னடா அது! பிரமாதப்படுத்துகிறாய், ஏகப்பட்ட கூச்சல்போடுகிறாயே! அதைத்தான் சொல்லேன்!

ஹேமசந்:—சட்டைப் பையிலிருந்து ஒரு (படத்தைஎடுத்து) இதோ இந்தப்படத்தையும்பார் அதோ நிற்கிறதே அந்தப் படத்தையும்பார்! இரண்டுபேரும் கூடப்பிறந்த சகோதரர்கள்தாமே! இந்த முகத்திலிருக்கிற தேஜஸைப்பார்-ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய உதடும் ஸ்ரீராமமூர்த்தியினுடைய கம்பீரமானபார்வையும் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியின் தெளிவும் ஒருங்கேவிளங்குகின்றனவேஉலகத்தில் புருஷலக்ஷணத்துக்குப் பிரத்தியக்ஷமான ஒரு அளவில்லையே என்று பிரமதேவன் இவரை சிருஷ்டித்தார்போலுமிருக்கிறது! இவர்தான் உன்னுடைய காலஞ்சென்ற புரு

ஷன்-இப்பொழுது அதோ சுவற்றில் சாத்திருக்கிறதே அந்தப் படத்தையும்பார்-இவன்தான் உனது தத்காலபுருஷன்-இரண்டுக்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கிறதுபார்! கையிலிருக்கும் உயர்ந்த ஒட்டு மாங்கனியை எறிந்துவிட்டு எவனாவது வெதும்பிவிழுந்துகிடக்கும் மாம்பிஞ்சைத் தின்பானா? அல்லது பருத்து பழுத்துப் பொன்னிறமாயிருக்கும் நெற்கதிரை விட்டுவிட்டு சாவியாய்ப் போய்விரைத்துக்கொண்டு நிற்கும் கதிரைப் பொறுக்குவானா? உனக்குக்கண்ணிருக்கிறதா? கண்ணிருந்துதானா இப்படிச் செய்தாய்? அல்லது ஆடுமாடுகளைப்போல் அக்கரைக்கிக்கரை பச்சையாகப்பட்டதோ? அம்மா, நீ இதைக் காதலென்று சொல்லமுடியாது-என்னைப்போலொரு தடிப்பயலுக்குத் தாயாக உன் வயிலிருப்பவளுக்குக் காதலென்பது விசேஷமாயிராது-அப்படியிருந்தாலும் அது அடக்கமாட்டாமலிராது-இரத்தத்திமிரெல்லாம் அடங்கி நல்லபுத்திக்குக் கீழ்படிந்து நடக்கும் காலமிது! ஆனால் அந்த வாழ்வைவிட்டு இந்த வாழ்வுக்கு வருகிறபுத்தி என்னபுத்தியோ தெரியவில்லை. இதைப்பைத்தியமென்று சொல்லுகிறதற்குமில்லை. பைத்தியமாயிருப்பவர்கள்கூட சாப்பாட்டிலும் கலியாணத்திலும் மட்டுமாவது பைத்தியம் நீங்கியிருப்பார்கள். எவ்வளவு காமாதுரனும் கருங்கல்லினிடத்தில் காமங்கொள்ளான். ஏனம்மா நிச்சயமாய்ச்சொல்லு, உன்னை எந்தப்பிசாசு பிடித்துக்கொண்டு இப்படியெல்லாம் ஆட்டிவைக்கிறது? உனக்கில்லவிட்டாலும் அந்தப்பிசாசுக்குக் கூடவாண் காதில்லாமல் போய்விட்டது!—பஞ்சேந்திரியங்களில் காலே அரைக்கால் இந்திரியமிருந்தாலும் அது இப்படிப் பிசகிப்போகாது-அந்தப் புருஷனிடத்தில் பூர்ணஅன்பும் செலுத்தினது உண்மையானால் இந்தப் புருஷனிடத்தில் செலுத்துவதற்கு அன்பேது? பூர்ணத்தில் இரண்டுபூரணமுண்டோ? இவ்வளவு வயதாயிற்றே, உனக்கே வெட்கமாயில்லையா? உனக்கே இவ்வளவு அடக்கமுடியாத காமமிருக்குமானால் என்னைப்போலொத்த சிறுகுழந்தைகளுக்குக் கேட்பானேன்! நாங்கள்செய்யும் அக்கிரமலீலைகளுக்கு வெட்கப்படவே வேண்டியதில்லை.

ராணி:—அப்பாஹேமசந்திரா, போதுமே! என் பார்வைமுழுவதையும் என்னுள்ளேயே திருப்புகிறாயே! அங்கே பார்த்தாலோ, சொல்லத்தகாத அநேக ஆபாஸங்களையெல்லாம் காண்கிறேன். எனக்கே வெட்கமாயிருக்கிறது! போதும், நிறுத்து!

ஹேமசந்:—இன்னும் அந்த எருமைக்கொட்டிலிலேயே படுத்திருக்க உனக்கு ஸஹிக்கிறதோ?

ராணி:—என்காதில் ஈயத்தைக்காய்ச்சு ஊளுகிறாயே!

ஹேமசந்:—ஒரு பிரஹத்திக்காரன், சுடுகாட்டுப் பறையன், முகத்தில் காறித்துப்பக் காசுகொடுக்க வேண்டும், அப்பேர்ப்பட்ட பயலைப்போய்ப் பிடித்தாயே! இந்தப்பயலுக்கு எவன் மகுடாபிஷேகம் செய்வித்தான்? எங்கேயோ அலமாரியிலிருந்து கிரீடத்தைத் திருட்டுத்தனமாய் எடுத்துத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடுகிறான்!

ராணி:—(காதைப் பொத்திக்கொண்டு) போதுமப்பா, நிறுத்தேன்!

ஹேமசந்:—இவன் என்னராஜா இவன்? குடுகுடுப்பையாண்டி ராஜா,!

(பிதிருதேவதை வருகிறது.)

சகலதேவதைகளும் என்னை ரக்ஷியுங்கள்! தங்களுக்கு என்னவேண்டும்?

ராணி—ஐயையோ, மறுபடியும் பைத்தியம் பிடித்துவிட்டதா?

ஹேமசந்:—நான் தங்களுக்குக் கொடுத்தவாக்குத்தத்தை மறந்துவிட்டேனென்றல்லவா நீங்கள் அதைஎனக்கு ஞாபகப்படுத்த வந்திருக்கிறீர்கள் அப்படிதானா? சொல்லுங்கள்.

தேவதை:—ஆம், நான்சொன்னதை மறந்துவிடாதே இப்பொழுது நான் வந்தகாரணம் தூக்கிப்போன உன்ஞாபகத்தை எழுப்பி விடுவதற்காகத்தான்! அதோபார்! உன் தாயின்முகத்தில் பயமும் திகைப்பும் குடிகொண்டிருக்கிறது, அவளைப் பயப்படுத்தாதே! சாந்தமாய்ப்பேசி அவளை சமாதானப்படுத்து?

ஹேமசந்:—ஏனம்மா, உனக்குஉடம்பு என்ன செய்கிறது?

ராணி:—நானல்லவோ உனக்கு என்னசெய்கிறதென்று கேட்கவேண்டும்! நீதானே எனனவோ வெட்டவெளியை விழித்துப்பார்த்துப் பேசிக்கொண்டிருக்கிறாய்? என்னவோ வெருண்டுவெருண்டு விழிக்கிறாயே? விழிப் துங்கவிடும்போல் பார்க்கிறாயே! உன் முகம் தலையெல்லாம மயிர்க்கூச்செடுத்திருக்கிறதே! பதறாமல்பேசு; எந்தவஸ்துவை அப்படிப்பார்க்கிறாய்?

ஹேமசந்:—அதோநிற்கிறாரே அவரைத்தான்! அவருடைய பார்வையும்முகமும் அவருடைய பரிதாபமான நிலைமையைக் கல்லுங்கரைந்துருகத்தெரிவிக்க வில்லையா?

ராணி:—இதென்னபிதற்றல்? யாரைப்பாத்து இதெல்லாம்பேசுகிறாய்?

ஹேமசந்:—அதோ அங்கே ஒன்றையுங் காணவில்லையா நீ?

ராணி:—ஒன்றையுங் காணேனே! இருந்தாலும் இந்த அறையிலிருப்பதை யெல்லாம் நன்றாய்க் காண்கிறேன்.

ஹேமசந்:—உனக்கு ஒன்றுங் காது கேட்கவில்லையா?

ராணி:—நாம் பேசிக்கொள்வது தவிர வேறொன்றுங் கேட்கவில்லை.

ஹேமசந்:—அதோபார்! அதோ மெதுவாய் நழுவிப்போகிறதுபார்! என் தகப்பனார் உயிருடனிருந்தபோ திருந்தமாதிரியே இதுவும் இருக்கிறது.) அதோ தான் வாசற்படியைத் தாண்டிப்போகிறது; தெரியவில்லையா? (தேவதை மறைந்து விடுகிறது.

ராணி:—இது தான் சரியான் பைத்தியத்திற்கடையாளம்! ஒன்றுமில்லாத இடத்தில் யாரோ இருப்பதாக பாவித்தல், வெட்ட வெளியைப் பார்த்துப்பேசுதல் இதெல்லாம் பைத்தியக் காரர்களுடைய வழக்கந்தான்.

ஹேமசந்:—பைத்தியமா? என் கையைப் பிடித்துப்பார்! உன் நாதுவை விட என் நாது படபடப்பாயிருக்கிறதா? அப்படியொன்று மில்லையே! எல்லாரையும் போலத்தானே இருக்கிறது. எனக்கு யாதொரு பைத்தியமுமில்லை. இப்பொழுது வேண்டுமானால் பார், நாம் பேசிக்கொண்டு வந்ததையெல்லாம் ஒரு அக்ஷரங்கூடவிடாமல் திருப்பிச் சொல்லுகிறேன். பைத்தியக் காரனால் அப்படிச் சொல்ல முடியுமா? அம்மா, வீணாய் அந்த மாதிரி தப்பெண்ணங்கொண்டு அற்ப சந்தோஷ மடையாதே. உன்பேரில் யாதொரு குற்றமுமில்லாதிருக்க நான் தான் ஏதோ பைத்தியம் பிடித்து உளறுகிறேனென்று நினைத்த மனதைப் பொய்சமாதானப் படுத்திக்கொண்டு மோசம் போகாதே! அப்படிச்செய்தல் தத்காலத்துக்கு உபசாந்தியாயிருக்கலாம்! ஆனால் வியாதி மட்டும் உள்ளாகவே யிருந்து கொண்டு விருத்தியாகி திடீரென்று பின்னிட்டுப் பதின்மடங்காக வெளிப்படும். நான் சொல்லுகிறதைக்கேள். போனது போகட்டும். அதற்காக நான் உன்னைக் கோபித்துக் கொள்ளவில்லை. அதைப் பற்றி நீ மனப்பூர்வமாய் பச்சாத்தாபப்பட்டு தெய்வத்தினிடத்தில் மன்னிப்புக் கேட்டுக்கொள். இனி வரப்போகிற விஷயத்திற்கு ஜாக்கிரதையாயிரு. உள்ளதை மூடி மூடிவைத்துக் கெட்டுப்போகாதே. இருக்கிறபாபம் போதாதென்று உள்ளொன்று வெளியொன்றாக வேஷம் போடுகிற பாபத்தையும் கட்டிக்கொள்ளாதே. நான் இவ்வளவுதூரம் தாயென்கிற மரியாதையைமறந்து பேசின தணிவுக்காக மன்னிப்புக் கோருகிறேன் ஏனெனில் காலத்தின் சுபாவம் அப்படியிருக்கிறது. இந்தகாலத்தில் கெட்டவழியில்போகிற வனைத்தடுத்து "அடே அப்படிப்போனால் இடறி விழுவாய், இவ்வழியாகப் போ" என்று நல்வழிகாண்பித்து உபகாரம் செய்வதற்குக்கூட அவனுடைய அனுமதியும் மன்னிப்பும் கேட்டுக்கொள்ள வேண்டியிருக்கிறது.

ராணி:—அடா குழந்தாய், என் ஹிருதயத்தை இரண்டாய்ப் பிளந்து விட்டாயே!

ஹேமசந்:—அப்படியானால் அழுகிப்போன பாகத்தைத் தூர எறிந்துவிட்டு மற்றொரு பாதியை வைத்துக்கொண்டு பரிசுத்தமாய் வாழ்ந்து கொண்டிரு நான்போய் வருகிறேனம்மா! இன்று முதல் என் சிறப்பன் படுக்கைக்குப் போகாதே. உன்னிடத்தில் சுபாவமாக யாதொரு சற்குணமுமில்லாவிட்டாலும், கொஞ்ச நாளைக்கு சிரமப்பட்டு அதை அப்பியசித்துப்பார். அப்பியாசத்தினால் ஆகாத தொன்றுமில்லை. இந்த தேகமே அப்பியாசத்தினால் தான் கிடைத்தது; அப்பியாசத்தினால் தான் விருத்தியாகிறது. துர்க்குணங்கள் அப்பியாசத்தினால் அபிவிருத்தி யாவதுபோலவே சற்குணங்களும் அதேமாதிரி ரத்தத்தில் ஊன்றிப்போகின்றன. அப்பியாசத்தை சுபாவத்துக் கடுத்தபடியென்று சொல்லுகிறார்கள். உண்மை யென்னவென்றாலோ, அப்பியாசமே தான் சுபாவமாகிறது. இரண்டும் ஒன்று தான், வேறல்ல நாம்செய்யும் வேலையிலெல்லாம் இந்த அப்பியாசத்தின் சக்தி இருந்து கொண்டே இருக்கிறது. ஆனால் அந்த சக்தியின் வலையிலகப்படாமல் வேலைசெய்வது தான் மகாகடினம். அப்படிச் செய்யக்கற்றுக் கொண்டால் தான் சுகதுக்கங்கள் நம்மை பாதிக்காது; அப்பொழுது தான் நாம் எல்லாவற்றையும் அடக்கி ஆண்டு அடிமைத்தனத்தைவிட்டு யஜமானத்துவ மடையலாம். இன்னொருதரம் போய் வருகிறேனம்மா. என்றைக்கு நீ திருவருளுக்குப் பாத்திரமாகப் பிரயத்தனப்படுகிறாயோ அன்றைக்குத் தான் உன்னருளும் ஆசீர்வாதமும்பெற நான் காத்திருப்பேன் என்றறிந்துகொள்—(புலஸ்தியவர்மாவைக் காண்பித்து) அந்தப்பெரிய வரைக்குறித்து நான் மிகவும் வருத்தப்படுகிறேன். ஆனால் ஈசுவராக்ஞை அப்படி யிருந்தது. ஊர்வம்பிலெல்லாம் தலையிட்டுக் கொள்ளுகிற அவர் சுபாவத்தை என் கையாலும், என்னுடைய அவசரப்பட்ட உஜாக்கிரதையை அவர் மரணமூலமாகவும் தண்டிக்க விதி ஏற்பட்டிருந்தது. ஆனால் இப்பொழுது ஒன்றும் மோசம்போய் விடவில்லை. அவரைக்கொன்றதற்காக என்ன தண்டனையை இவ்வுலகிலாகிலும் வேறுலகிலாகிலும் எந்த நிமஷத்திலும் பெற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறேன். ஆதலால் மறுபடியும் உத்தரவு கேட்டுக் கொள்ளுகிறேனம்மா. நான் கோபித்துக்கொண்டதெல்லாம் உன்னிடத்திலுள்ள தாயென்னும் வாஞ்சையினால் தான். அழ அழச்சொல்வார் நம் மனிதர். இல்லாவிட்டால், பேச்சினால் உன் மனதைப் புண் படுத்துவதில் எனக்கென்ன லாபம்? இன்னும் ஒரே ஒருவார்த்தை சொல்லுகிறேன் கேள்.

ராணி:—(குரல் தழதழத்து விம்மிக்கொண்டு) இன்னும் என்ன செய்யவேண்டுமென்கிறாய்?

ஹேமசந்:—ஒன்றுமில்லை; நான் சொன்னதைத் தவிர மற்றதெல்லாம் செய்—அந்தக்குடிகாரப்பயல் உன்னை இன்னும் படுக்கைக்குக் கூப்பிட்டும் நீயும் தடைசெய்யாமல் போ. அவன் உன் கன்னத்தைக் கிள்ளி 'அன்னமே கிளியே, என்று கொஞ்சிக்குலாவிட்டும்—அந்த ஆனந்த பரவசத்தில் நீயும் வேண்டுமானால் இப்பொழுது நாம் பேசிக்கொண்டிருந்ததையெல்லாம் அவனிடத்தில் சொல்லிவிடு. என் மகனுக்கு நிஜமாகப் பைத்தியம் பிடிக்கவில்லை, வேஷம் போடுகிறான் என்று சொல். நான் வேண்டா மென்ன வில்லை.

இந்தவிஷயம் அவனுக்குத்தெரிந்திருப்பதும் ஒரு காரியத்துக்கு நல்லதுதான். ஏனெனில் எவன் தான்

ஒரு ராஜவம்சத்தில் பிறந்த ராணியாகவும் புத்திசாலியாகவும் சட்டழகியாகவு மிருந்துகொண்டு, ஒரு அருமைக்கணவன், ஆசைநாயகன், மகாபாதகனிடத்தில் இதையெல்லாம் சொல்லாமலிருப்பாள்? வெட்கம், மானம், அச்சம், நாணம் எல்லாவற்றையுந் துறந்துவிட்டு 'எங்களப்பா குதிருக்குள்ளில்லை, என்று ரகஹயத்தையெல்லாம் நீயே வெளிவிட்டுவிடு. நான் கூடாதென்று தடுக்கவில்லை.

ராணி :—நிச்சயமாய்ச் சொல்லுகிறேன், நீ சொன்னதைத்திருப்பிச் சொல்ல எனக்குப்பிராணனில்லை; நினைத்துப்பார்க்க தைரியமில்லை.

ஹேமசந் :—நான் பூனைவுக்குப் போகவேண்டுமென்பது உனக்குத் தெரியுமல்லவோ?

ராணி:—ஆம் நான் அதை மறந்துவிட்டேன் நானென்ன செய்யட்டும். அப்படிதான் தீர்மானித்தாகிவிட்டது.

ஹேமசந்:—ஸ்ரீமுகம் எழுதி முத்திரைபோட்டாகிவிட்டதே கடோர்கஜசேனன் உக்கிருத்திரப்பிரதாபன் என்னும் நல்லபாம்புக் குட்டிகளாகிய என இரண்டு பள்ளித் தோழர்கள் மூலமாய்க் கடிதத்தைக் கொடுத்து என்னையும் அவர்களுடன் கூட ராஜப்பிரதிநிதியாக அனுப்பப்போகிறார்கள். என்னை யமலோகத்திற் கனுப்புவதற்கு இவர்களெல்லாம் விருதுகள்போலும்! எனக்கு இவர்களுத்தெரிந்ததற்குமேல் அரை மாகாணி அதிகம். தெரியும் ஆதலால்பாதகமில்லை, ஒரு கைபார்த்துக்கொள்வேன். இதுவும் ஒரு வேடிக்கை தானே! பில்லி சூனியக்காரனை அவன் மந்திரம் அவன் மேலேயே பாயும்படிசெய்வது ஒரு விளையாட்டல்லவா? அவர்கள் தடுக்கின் கீழ்நுழைந்தால் நான் கோலத்தின் கீழ்நுழைவேன் அவர்கள் எட்டடி தோண்டி வெடிமருந்து வைத்தால் நான் பத்தடி தோண்டி வைக்கிறேன். கள்ளன் வீட்டில் குள்ளன் திருடுவதைப்போல் வேடிக்கையான விஷயம் எது? இவரைக் கொன்றதற்காக என்னை, நிச்சயமாய் வெளியே அனுப்பிவிடுவார்கள். இவரை அடுத்த அறையில் விட்டுக் கதவைச் சாத்திவிடுகிறேன். நல்லதம்மா போய்வருகிறேன். இப்பொழுது இவர் எவ்வளவு சாந்தமாய் அமைதியாய் பிதற்றலெல்லாம் விட்டுத் துருதுருப்பெல்லா மடங்கி இருக்கிறார்! வாருமை, அடுத்த அறைக்குப் போவோம். எனக்கு உத்திரவுகொடு, அம்மா! (என்று புலஸ்திய வர்மாவைத்தூக்கிக் கொண்டு ஹேமசந்திரன் போய்விடுகிறான். ராணி பிரமித்து நாற்காலியில் சாய்ந்துவிடுகிறாள்.)

காக்ஷி 5. { இடம்:—அந்தப்புறத்தில் ஒரு அறை
காலம்:—இரவு மூன்றாவது ஜாமம் }

(ஹேமசந்திரனிக் புலஸ்தியவர்மாவின் பிரேதத்தைத் தூக்கிக்கொண்டு வருகிறான்.)

ஹேமசந்:—(பிரேதத்தைக் கீழே படுக்கவிட்டு) ஆஹா என்ன மோசம்போனோம்! இவரை துருதுருத்த கிழவன் என்று சொன்னதுபோக நாம் பட்டபட்ட பூயூலாய் விட்டோமே! என்ன தம்பிதம் செய்துவிட்டோம் பார்த்தாயா! இனி ஒன்றிலும் அவசரமே உதவாது. அவசரப்படுவதைப்போல் விகாரம் வேறுண்டா? அல்லது சாந்தமான அமைதியைக் காட்டிலும் வேறு அழகுண்டோ வீடுநெருப்புப்பற்றி எரியும்போதும் அமைதியாய் நிதானமாய் ஜலத்தை இழுத்துக் கொட்டுவேமே! தேகத்தினால் செய்கிற காரியத்தை சீக்கிரமாய் செய்வது நல்லதுதான் அதற்காக மனது அவசரப்பட்டுப் படபடக்க வேண்டிய தில்லையே! அது இருக்கவேண்டிய இடத்திலேயே இருக்கலாமல்லவாவோ! இனி நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் நாம்வேலை செய்கிறவனைத் தோற்றாமல் சுத்த சாவகாசமாய்க் காற்று வாங்குபவன் போலிருக்கவேண்டும். நிமிஷத்துக்கு அநேக ஆயிரம் காதம் உருண்டோடுகிற இவ்வுலகம் பார்வைக்கு ஓடுகிறதாகத்தெரிகிறதா? அல்லது இவ்வளவு தூரம் ஓடவேண்டுமே என்று கவலைப் பட்டு அவசரப் படுகிறதா? அல்லது ஓடின சுவடுதான் தெரிகிறதா? ஒன்று மில்லை; எப்பொழுதும் ஒரே அமைதியாய் நிதானமாய் இருக்கிறது. நாமும் என் அப்படி இருக்கக்கூடாது?

இந்தப் பெரியவருக்கு நமக்கும் முகத்தில் விழித்தவேளையோ என்னவோ, எப்பொழுதும் நம்மிருவருக்கும் பதினெட்டுப் பொருந்தமாகவே இருந்தது. இவரைக்கண்டால் எனக்குக் கொஞ்சங்கூட ஆகவேயில்லை. இவரை உயிரோடு இருக்கிறவரையில் கண்டுகரித்தேன். இவரிடத்திலுள்ள கபடம் எனக்குப்பிடிக்க வில்லை அதுவும் சரியான கபடமல்ல, அசட்டுக்கபடம். பூனை கண்ணை மூடிக்கொண்டு பாலைக்குடிக்கிற மாதிரியான கபடம்தான். இவருடைய கபடம் இதுவரையில் ஒருவரையும் ஏமாற்றினதில்லை. அதற்காக இவரை அறியாக்குழந்தைபோல் பாவித்து மன்னிக்காமல் இவரோடு சரிசமானமாக வைரம் கொண்டாடியது எவ்வளவு முட்டாள்தனம்! உற்றுப்பார்க்கப் பார்க்கத்தான், நாம் பிறரை முட்டாள் என்று சொன்னதுபோக, நம்முடைய முட்டாள் தனம் கொஞ்சம் கொஞ்சமாய் வெளிப்படுகிறது! ஓகோ! இவர்களெல்லாம் எனக்கு புத்தி புகட்டவந்த தேவதைகளோ? இவர்களை நாம் எவ்வளவு இழிவாக நினைத்துவிட்டோம்! என் தாயும் சிற்றப்பனும், இந்தக்கிழவனும் உத்பலாக்ஷியும், கடோர்க்கஜசேனன் உக்கிருத்திரப் பிரதாபர்களும் எனக்கு அனுபவம் முதிருவதற்காகவல்லவோ இந்தமாதிரி இழிவான வேஷம்போட்டு இவ்வுலகில் திரிகிறார்கள். ஆண்டவனல்லவோ எனக்காக இவ்வுருவெடுத்து இம்மாதிரி ஈனத்தொழிலெல்லாம் செய்து கொண்டிருக்கிறார். அதை நான் அறியாமல் அவரை அவமதித்தேனே! வெகு அபசாரங்கள் செய்துவிட்டேனே! என் கருணைக்கடலே இந்த எளியவனிடத்தில் எவ்வளவு கிருபை வைத்திருந்தாய்! நான் அதற்கு அருகனாயிராமல் போய்விட்டேனே! என்னை மன்னிக்கவேண்டும். சரணம்! சரணம்! (என்று பிரேதத்தை நமஸ்கரித்து கண்களில் நீர்ததும்ப எழுந்துபோய்விடுகிறான்.)

(மூன்றாவது அங்கம் முற்றிற்று.)

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.
## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

அதிகாரம் 15.

ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் தங்கத்தை அழைத்துக் கொண்டு பந்தலூருக்குப் புறப்பட்டார். பந்தலூருக்கு றெயில் கிடையாது. வண்டி மார்க்கமாக நாலு நாள் போகவேண்டும். ஸ்ரீனிவாஸ சாஸ்திரி இரண்டுநாள் பயணம் போய் மூன்றாம்நாள் காலையில் ஓர் ஊரில் போய் தங்கினார். தங்கத்துக்கு அப்போது எட்டாவது மாதமென்று ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுடைய எண்ணம். அதனால் காமேசுரய்யர் ஒரு மாதத்திற்கு முன் கமலாவடி வந்து தங்கத்தைக் கூட்டிப்போக வேணுமென்று சொன்னபோது கூட ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் அதற்குள் அனுப்ப மாட்டேனென்று சொல்லிவிட்டார். ஆனால் தங்கத்துக்கு அது ஒன்பதுமாதம். தங்கம் தனக்கு வயிற்றில் ஏதோ உபத்திரவம் செய்கிறதென்று குப்பலூரில் இறங்கின வீட்டில் படுத்துக் கொண்டாள். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் என்செய்வார். உடனே அங்கே யாராவது மருத்துவம் தெரிந்த அம்மா இருக்கின்றாளாவென்று விசாரித்தார். அங்கேயிருந்து பத்து மைல் தூரத்தில் ஒரு அம்மாள் இருக்கிறதாக ஒருவர் சொன்னார். ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் உடனே அந்த மனிதனுக்கு தகுந்த உபகாரம் செய்வதாகச் சொல்லி அந்த அம்மாளுக்கும் 50-ரூபாய் கொடுத்தனுப்பினார். அந்த அம்மாள் அதுவரையில் 50-ரூபாய் சேர்த்து பார்த்தவளல்ல ஆதலால் உடனே தாமதிக்காமல் புறப்பட்டு வந்து சேர்ந்தாள். அந்தம்மாள் வந்து சேர்வதற்கும் தங்கம் பிரசவிக்கிறதற்கும் சரியாக இருந்தது அந்தம்மாள் தங்கத்தை கண்டவுடனே ஏதோ திகிலடைந்தவள்போல பிரமித்து நின்றாள். பிறகு தங்கத்துக்கு வேண்டிய உபசாரங்களையெல்லாம் செய்தாள், தங்கத்துக்குப் பிள்ளைக் குழந்தை பிறந்தது. ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு இந்த சமாசாரத்தை உடனே கமலாவடிக்கும் பூவர்ச நல்லூருக்கும் சொல்லியனுப்ப வேண்டுமென்றிருந்தும் அங்கே தந்தியில்லாததால் சரிப்படவில்லை. பிறகு கடிதங்கள்மட்டும் எழுதிப் போட்டுவிட்டு சும்மா இருந்துவிட்டார். தங்கத்துக்கு வேண்டிய உபசாரங்கள் செய்வதற்காக அவர் இன்னும் இரண்டு ஸ்திரீகளை ஏற்படுத்தினார். தங்கத்துக்கு மட்டும் இந்த இரண்டு ஸ்திரீகளின்பேரில்தான் பிரியம் ஏற்பட்டது. மருத்துவத்துக்கு வந்த கிழவியின் மேல் வெறுப்பு ஏற்பட்டது. ஏனென்றால் அவள் வந்ததுமுதல் அவள் முகம் ஏதோ திருடினவள் போல இருந்தது. அடிக்கடி தனக்குத்தானே ஏதோ பயித்தியம் பிடித்தவள்போல பிதற்றிக்கொண்டாள். போகும்போதே எங்கேயாவது நின்று சுற்றுமுற்றும் பார்ப்பாள். இதெல்லாம் தங்கத்துக்கு அவளிடத்தில் ஏதோ சந்தேகத்தைக் கொடுத்தது. ஆகிலும் அவள் மருத்துவத்திலும் குழந்தையை பாதுகாப்பதிலும் கெட்டிக்காரியாயிருந்தபடியால் அவளை விடக்கூடாதென்று தீர்மானித்தாள். மூன்றாம்நாள் பகலில் தங்கம் தன் ஊர் சமாசாரங்களைச் சொல்லிக்கொண்டு வரும்போது அந்தக் கிழவி என்ம்மா நீ ஊருக்குப் போனால் எங்கேயிருப்பாயென்று கேட்டாள். தங்கம் தான் பந்தலூருக்கு பங்களாவில் போய்தான் குடியிருப்பதாயும் மேற்கால வீட்டைகூட ரிபேர் செய்தாகிவிட்டதென்றும் அதில் வடகோடி உள் மட்டும் ரிபேர் ஆகவில்லையென்றும் அதுவும் சீக்கிரம் ரிபேர் ஆய்விடுமென்றும் சொன்னாள். இதைக் கேட்டவுடன் அந்தக் கிழவி அம்மாள் உடம்பு சற்று நடுங்கிற்று. உடனே அவள் மேல் பேச்சு பேசாமல் எழுந்து போய்விட்டாள். தங்கம் இதைக் கண்டு வெகு ஆச்சரியப்பட்டு இவளுக்குப் பைத்தியம் ஏதாவதுண்டோவென்று மறுபடியும் சந்தேகித்தாள். இவள் சந்தேகித்ததற்குத் தகுந்தாப்போல் அந்தம்மாள் வெளியில் போய் தனக்குத்தானே தனிமையாக என்னவோ பேசிக்கொண்டு நின்றாள். தங்கத்திற்கு இதெல்லாம் பார்க்க அவளுடன் தனிமையாக இருப்பதில்கூட பயமாக இருந்தது. அன்று ராத்திரி தங்கம் தூங்குவதற்கென்று படுத்துக்கொண்டாள். ஆனால் அவளுக்கு இதே நினைவால் தூக்கம்கூட வரவில்லை. சில நிமிஷங்கள் தூங்குகிறதும் சில நிமிஷங்கள் அரைக் கண் திறந்து பார்ப்பதுமாக இருந்தாள். இப்படி இருக்கும் காலத்தில் அந்தக் கிழவியம்மாள் சுற்றிலும் பார்த்துக்கொண்டு மெள்ளத் தன்னிடம் வருவதைக் கண்டாள். இவள் என்ன செய்கிறாள் பார்ப்போமென்று தங்கம் கண்ணை கொஞ்சம் திறந்து தூங்குவதுபோல பாவனை செய்ய அவள் இவளிடம் வந்து குனிந்தாள். தங்கத்துக்கு என்ன செய்வாளோவென்று உடம்பெல்லாம் நடுக்கமெடுத்தது. அந்த அம்மாள் தங்கத்தின் காது பக்கத்தில் தன் முகத்தைவைத்து மெதுவாக தங்கம் பங்களாவுக்கு மேல்புறம் வீட்டில் பாசிபறைக்குப் போகாதே என்றாள். தங்கம் இதற்குள் திகிலடைந்து ஒன்றும் செய்யத் தோன்றாமல் கூ. கூ. என்று கத்தினாள். கிழவியம்மாள் உடனே கொஞ்சம் தூரத்தில் போய்விட்டாள். தங்கம் இப்படி கூச்சல் போடவும் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் ஓடிவந்தார். மற்ற இரண்டு ஸ்திரீகளும் ஓடிவந்தார்கள். தங்கம் உடனே புருஷனைப் பார்த்து உங்களுக்கு நான் பிழைக்கவேண்டுமென்றிருந்தால் இந்தக் கிழவியம்மாளை உடனே அவளுடைய ஊருக்கு அனுப்பிவிடுங்கள். அவளை வையவேண்டாம் திட்டவேண்டாம். அவள் என்னை

ஒன்றும் செய்யவில்லை. ஆனால் எனக்கு அவளைக் கண்டால் பயமாயிருக்கிறது. அவளுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக்கொடுத்து உடனே அனுப்பி விடுங்களென்றாள். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் உடனே அந்த அம்மாளுக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்து அனுப்பிவிட்டு மற்ற ஒரு ஸ்திரீயை அறையிலிருக்கும்படி திட்டம் செய்தார். மறுநாள் காலையில் தங்கத்தை விபரமாய் விஜாரிக்கவும் அந்த அம்மாள் தன்னிடம் மெதுவாய் தூங்கும்போது வந்ததையும் காதில் மேற்கு வீட்டின் பாசியறையில் போகாதேயென்று சொன்னதையும் சொன்னாள். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு இதையெல்லாம் கேழ்க்க கேழ்க்க வெகு ஆச்சரியமாயிருந்தது. அந்தக் கிழவி யாராக இருக்ககூடுமென்று யோஜித்தார். ஒன்றும் புலப்படவில்லை. பிறகு அவளுடைய ஊருக்குப்போய் அவள் யாரென்று விஜாரிக்கிறதென்று தீர்மானித்தார். ஏனென்றால் அவள் தங்கத்தின் பங்களாவில் பழகினவளாயிருக்கவேண்டுமென்றும் பாசியறை எதுவென்பதும் அதில் என் தங்கத்தை போகவேண்டாம் என்றதென்றும் இதையெல்லாம் விஜாரித்தால்தான் நலமென்று நினைத்தார். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் அந்தவூர் போய்ச்சேர்ந்து விஜாரித்ததும் அந்தவூரார் அந்தக் கிழவி நேற்றுத்தான் ஊரைவிட்டுப் புறப்பட்டுப் போனாளென்று சொன்னார்கள். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு ஒன்றும் செய்யத் தோன்றாமல் அவளைப்பற்றி சுற்றுப் பக்கங்களில் விஜாரித்து பார்த்தும் அவள் அகப்படவில்லை. ஸ்ரீனிவாஸ சாஸ்திரி அவள் ஒருவேளை அந்த பங்களாவுக்கு ரகசியமாகப் போனாலும் போயிருக்கலாம். உன்னை எப்போ பாசியறையில் போகாதே என்றாளோ உனக்குமுன் அந்த அறையைப் பார்க்க அவள் ரகசியமாக போனாலும் போகலாம். நான் வேம்புவையருக்குக் கடிதம் எழுதட்டுமாவென்றார். தங்கம அதற்கு சம்மதிக்க அவர் தான் பங்களாவுக்கு வந்துசேர 7-8. தினம் செல்லுமென்றும் அதற்குள் சிசப்பாயும் நெட்டையாயும் பருமனும் உள்ள ஒரு கைம்பெண்டாட்டிக் கிழவி பங்களாவுக்கு வரும் பக்ஷத்தில் அவளிடம் மெள்ள சினேகம்செய்து அவள் யாரென்று விஜாரித்து அவளுக்கு வீட்டையெல்லாம் காண்பித்து உபசரிப்பதுபோல் அவளை செவ்வையாய் விஜாரித்து தெரியப்படுத்தவும் என்று எழுதினார். அந்தக் கடிதம் எழுதின தினமே காமேசுவரய்யரும் காமாக்ஷியம்மாளும பூவாசகல்லூரிலிருந்து வந்தார்கள். அவர்களைக் கண்டதும் தங்கத்துக்கு சந்தோஷம் ஒரு பக்கமும் மத்தியில் பிரசவித்ததற்கு ஒரு பக்கம் சங்கோசமுமாக இருந்தது. காமேசுவரய்யர் வழியில் இப்பேர்ப்பட்ட ஆபத்து நேர்ந்ததற்கு இவ்வளவாவது பகவான் உனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தாரேயம்மா வென்று தங்கத்துக்குத் தேறுதல் சொல்லி சந்தோஷப்படுத்தினார். காமேசுவரய்யர் பிறகு புண்ணியாகவாசனத்தை அங்கேயே வெகு சிறப்பாய்சசெய்து அப்படியே தங்கத்தையும் ஸ்ரீனிவாசனையும் ஊருக்கு அழைத்துக்கொண்டு போகிறதென்று தீர்மானித்தார். நாராயணசாஸ்திரிகளுக்குத் தந்தி கொடுத்தும் அவரும் வெங்கலக்ஷ்மி அம்மாளும் புறப்பட்டு வரவில்லை. நாராயணசாஸ்திரிகளுக்கு வரவேண்டுமென்று ஆசை உண்டு ஆனால் வெங்கலக்ஷ்மி அம்மாளுக்குத் தங்கத்தின்மீது கோபமாதலால் அவள் நாராயணசாஸ்திரிகளைக் கலைத்து அங்கே என்ன போகிறது. அவள் ஏதாவது பெரியவாள் நாம் இருக்கிறோமே என்று நம்மைக் கேட்டாளா. ஓரே வீம்பாய் புருஷனோடு போகவேண்டுமென்றுதானே ஒரு காலால் நின்றாள். இப்போ கஷ்டப்படட்டுமே. அந்தப் புருஷன் அவளுக்கு அறைக்கு இருக்கட்டுமே. இந்த நாள் பெண்களுக்குத்தான் கூச்சம் என்பதேயில்லை. பிரஸவிக்கிற அறையில்கூட புருஷனைப் பார்த்துக்கொண்டிருக்கவேணும். அங்கேயும் மாமியாரை தூஷித்து ரகசியம் பேசவேண்டுமென்கிறார்கள். புருஷர்களுக்கும் கூச்சம் இல்லாமல் பெண்டாட்டி பிரசவிக்கும்போதுகூட அவளைவிட்டுப் போகமாட்டேனென்கிறார்கள். உங்களுக்கு இதெல்லாம் தெரிந்ததா. நீங்கள் சுத்த சர்ஞடகம். இந்தகாலத்துப் பிள்ளைகளைப் பாருங்கள் பெண்டாட்டியென்றால் போதும். அவளைவிட்டு அப்புறம் போகிறதில்லை. தாயார்மட்டும் ஆகாது என்று நாராயணசாஸ்திரிகளுக்கு ஓர் பெரிய பிரசங்கம் செய்ய ஆரம்பித்தாள். அதற்கு அவர் நாம் ஆக்ஷேபித்தால் வீண் சண்டை நேரிடுமென்று அவளிஷ்டப்படியே விட்டுவிட்டு போகாமலிருந்துவிட்டார். வெங்கலக்ஷ்மி அம்மாள் அந்த ஊர் வம்பர் மகா ஜனசபைக்கு அக்ராசனாதிபதி. அந்தவூர் அதிசய சமாசாரமெல்லாம் முதலில் இவளுக்குத்தான் தெரியும். சண்டை மூட்டிவிடுவதில் முதல்த்யாகம் இவளுக்குத்தான் கொடுக்கவேண்டும். நாரதருக்குகூட இவளைப்போல் வெகு சீக்கிரமாக சண்டைமூட்டிவிட தெரியாது. வெங்கலக்ஷ்மி அம்மாளுடைய வம்பர் மகா ஜனசபை தினந்தோறும் காலமே பத்துத் தேய்க்கும்போது வாய்க்காலிலும் ஸ்நானம் செய்யும்போது காவேரியிலும் மத்தியானம் வந்திரத்தில் மாவரைக்கும்போதும் தோசைக் கரைக்கும் சமயத்திலும் அவள் வீட்டிலும் கூடும். அதற்கு இடம் இந்த இடம்தானென்றும் மணி இன்ன மணிக்குத்தானென்றும் குறிப்புக் கிடையாது. இது தினந்தோறும் நடக்கும் மீடிங்குகளைத் தவிர மாதந்தோறும் இவள் தூரமாய் இருக்குங் காலமாகிய மூன்று நாளிலும் பெரிய காங்கிரஸ் மகா சபைகூடும். இப்படிப்பட்ட அக்ராசனாதிபதியைக் கண்டு நாராயணசாஸ்திரிகள் பயப்படவேண்டாமா! தங்கம் பிரஸவித்ததை கேட்டு அந்த ஊரில் கேலி செய்யாதவர்கள் கிடையாது. ஒரு பெண் வண்டியிலேயே பிரஸவித்துவிட்டாளாமென்றனர். வேறு ஒருத்தி இல்லை இல்லை வண்டியைவிட்டிறங்கி ஒரு வீட்டில் நுழைவதற்குள் வாசலிலேயே குழந்தை விழுந்துவிட்டதாம் என்றாள். மற்ற ஒரு பெண் ஒருவரும்

தணைக்கில்லாமல் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள்தான் குழந்தையை எந்தினாராம் என்றாள். ஏற்கனவே இப்படியெல்லாம் கேலிசெய்துகொண்டு இருக்கும் ஜனங்களை கண்டிக்காமல் வெங்கலக்ஷ்மி அம்மாள் வம்பர் மகா ஜனசபையிலும் தன் நாட்டுப்பெண் தான் வேண்டாமென்றபோதே புறப்பட்டுப்போனதையும் வழியில் நேர்ந்த விபத்தையும் சொல்லி நாட்டுப்பெண்ணை தூஷித்தாள். அக்ராசனாதிபதியே தன் நாட்டுப்பெண்ணைப்பற்றி அவதூறு பேசும்போது மற்றவர்களுக்கு கேழ்க்சவும் வேண்டுமோ. ஆத்துக்கார பிராமணன் அடி மூண்டை என்றால், பிச்சைக்கு வந்தவன் பேமூண்டை என்பானும். அந்த ஊரில் எங்கே பார்த்தாலும் இதே பேச்சாக இருந்தது. பூவாசநல்லூரும் வம்பில் இதற்கு குறைந்த ஊரல்ல. அங்கேயும் ஜனங்கள் கமலாவடியில் தங்கத்தைப்பற்றி கேலி செய்தது போலவே கேலி செய்தார்கள். ஆனால் இது விஷயமாக மகாதேவய்யர் பெண்சாதி பார்வதியம்மாள் தங்கத்தை தன் பெண்போலவே நினைத்து தூஷணையாகச் சொன்னவர்களைக் கண்டித்து அவர்கள் சொல்வதெல்லாம் பொய்யென்றும தங்கம் ஓர் பெரிய வீட்டில் இடங்கொடுக்கப்பட்டு இரண்டு மருத்துவச்சிகள் ஒத்தாசையின்பேரில் வீட்டில் இருப்பதைவிட இன்னும அதிகமான சுகத்துடன் பிரசவித்தாளென்றும் சொல்லி ஜனங்கள் மேன்மேலும் தூஷிக்காதபடி தடுத்தாள். ஸ்ரீனிவாச சாஸ்திரிகளுக்குத் தன் தகப்பனார் தாயார் வரவில்லையென்று நிரம்பவும் வருத்தம். ஆனால் வெளியில் காட்டிக்கொள்ளக்கூடவில்லை. காமேசுரய்யர் அது பிறருடைய வீடு ஊர் என்றுகூட பாராமல் புண்யாவாசனத்துக்கு அந்தவூர் முழுவதும் நல்ல சாப்பாடு போட்டு வெகு சிறப்பாய் நடத்தினார். தங்கம் வழியில் பிரஸவித்தோமென்று குறைபட்டுக்கொள்ளக்கூடாதென்பது அவருடைய எண்ணம். தங்கத்துக்கும் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கும் வெகு உயர்ந்த புடவையும் வேஷ்டியும் வாங்கிகொடுத்தார். புண்யாகவாசனமானபிறகு 2-நாள் அந்த ஊரிலேயே இருந்துவிட்டு அவர்கள் எல்லோரும் பூவாசநல்லூருக்குப் புறப்பட்டார்கள். தங்கத்துக்கு தேகம் அதுரும் என்றும், வண்டி கூடாதென்றும் காமேசுரய்யர் ஓர் பல்லக்கு வரவழைத்து தங்கத்தையும் குழந்தையையும் அதில் வைத்து ஊருக்குக் கூட்டிப்போனார். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் பங்களாவுக்கு போகமுடியாதென்று கண்டு வேம்புவையருக்கு தாங்களெல்லாரும் பூவாச நல்லூருக்குப் போய்விட்டதாயும் பங்களாவுக்கு வர நாள் செல்லும் என்றும் சமாசாரம் அனுப்பினார். தங்கம் பிறகு ஒன்னறை வருஷம் காமேசுரய்யருடனேயே பூவாசநல்லூரிலிருந்தாள்.

---

## 16-வது அத்தியாயம்.

நாராயண சாஸ்திரிகளுக்கு கிருஷ்ண சாஸ்திரிகள் ஒன்றவர் தமயனென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். அவர் குணம் நாராயண சாஸ்திரிகளுக்கு நேர் விரோதமானது. கிருஷ்ண சாஸ்திரிகள் பிறருக்கு தீங்கு செய்யமாட்டார். ஈவு இரக்கம் பச்சாதாபம் எல்லாம் அவருக்கு உண்டு. தன்னால் கூடியமட்டும் ஏழைகளுக்கு ஒத்தாசை செய்வார். இவர் பெண்சாதி அனந்தலக்ஷ்மி என்பவள் மகாதேவய்யருடைய தமக்கை பெண். இந்த அம்மாளும் வீட்டுக்காரியங்களை வகிப்பதில் வெகு புத்தியுள்ளவள். தன் குடும்பத்தில் உண்மையான விசுவாஸமாயிருப்பவர்களுக்கு எப்போதும் ஒத்தாசை செய்வாள். மற்றவர்களுக்கு கண்டிப்பாய் என்னால் ஒன்றும் செய்யமுடியாதென்று சொல்லிவிடுவாள். இவள் சில சமயங்களில் இப்படி நிர்தாக்ஷிணியமாயிருப்பதைப் பார்த்து இவளைப் பொல்லாதவள் என்று சிலர் சொல்லுவார்கள். அனந்தலக்ஷ்மி அம்மாளின் தகப்பன் இறந்துபோகும் காலத்தில் அவருக்கு லக்ஷ ரூபாய் ஸ்திதியிருந்து பிள்ளையில்லாமற் போயிற்று. ஆகையால் அந்த சொத்து அனந்தலக்ஷ்மி அம்மாளுக்குக் கிடைத்தது. கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு பிதிரார்ஜித சொத்தும் அரை லக்ஷம் இருந்தது. இந்த இரண்டு சொத்துகள் சேரவும் கிருஷ்ண சாஸ்திரிகள் அந்த ஊருக்கே ஒரு பெருத்த தனவானாக ஆனார். கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு ஆண் சந்ததியில்லை. ஆனால் மூன்று பெண்கள் இருந்தது. இந்த மூன்று பெண்களையும் கிருஷ்ண சாஸ்திரிகள் வெகு செல்வமாய் வளர்த்தி வந்தார். இவருடைய துரதிர்ஷ்டம் முதல் பெண் இரண்டாவது பெண் இரண்டும் இரண்டு நாள் காயலாவாயிருந்து மூன்றாம்நாள் சேர்ந்தாற்போல் இறந்துபோய் விட்டார்கள். ஏற்கனவே பிள்ளை இல்லையென்று விசாரப்பட்டுக்கொண்டிருக்க இருந்த பெண்கள் இரண்டும் ஒரே நாளில் போகிறதென்றால் இதை யார்தான் சகிக்கக்கூடும். கிருஷ்ண சாஸ்திரிகள் அனந்தலக்ஷ்மி அம்மாள் இவர்கள் பட்ட துயரம் சொல்லிமுடியாது. கடைசியில் நாள்கள் வாரங்களாக வாரங்கள் மாதங்களாக மாதங்கள் வருஷங்களாக கிருஷ்ண சாஸ்திரிகள் அனந்தலக்ஷ்மி அம்மாள் இருவரும் கொஞ்சம் கொஞ்சமாக இறந்துபோனவர்களை மறந்து மூன்றாவது பெண் இராஜம்மாள்பேரில் தமது அன்பையெல்லாம் வைத்தார்கள். இராஜம்மாள் வெகு புத்திசாலியாய் படித்துக்கொண்டு வந்தாள். அவர் அவள் பேரில் காற்றடிக்கவும் சகிக்கமாட்டார். கிருஷ்ண சாஸ்திரிகள் இவ்வளவு கஷ்டப்பட்டும் நாராயண சாஸ்திரிகள் நாம் கிருஷ்ண சாஸ்திரிகளைப்போல் இல்லையே என்று வருத்தப்பட்டார்: ஏனென்றால் அவருக்கு பணம்தான் பெரிது. நாராயணசாஸ்திரிகளுக்கு கிருஷ்ண சாஸ்திரிகள்மீது வெகு சுளிகை. நாம் சாதாரணமாக இருக்க இவன்மட்டும் ஊருக்கே பணக்காரனாகவும் செல்வாக்குள்ளவனாகவும்

இருக்கிறதா என்று அடிக்கடி நினைப்பார். சில சமயங்களில் இவன் சொத்தை அபகரிக்க என்ன செய்யலாமென்றும் யோஜிப்பார். ஆனால் வெளியில் மட்டும் கிருஷ்ண சாஸ்திரிகளைக் கண்டால் வெகு பிரியமாயும் பயத்துடனும் பேசுவார். இதையெல்லாம் அறியாத கிருஷ்ண சாஸ்திரிகள் நாராயண சாஸ்திரிகளுக்கு வேண்டிய உபகாரங்கள் செய்து வந்தார். கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு அந்தவூர் ஆள்கள் முழுவதும் வசியம். நாராயண சாஸ்திரிகள் தனக்கு என்ன வேண்டியிருந்தபோதிலும் அவரிடம்தான் வந்து சொல்லுவார் அவர் உடனே அதுகளை வாங்கித் தருவார். சில சமயங்களில் நாராயண சாஸ்திரிகள் பணம் கேட்டபோதிலும் கணக்கில்லாமல் கொடுப்பார். இப்படியெல்லாம் ஒத்தாசை செய்த கிருஷ்ண சாஸ்திரிகளை நாராயண சாஸ்திரிகள் காணாத இடங்களில் தூஷிப்பார். வெங்கலக்ஷ்மி அம்மாளும் வம்பர் மகா ஜனசபையில் எப்போதும் அநந்தலக்ஷ்மி அம்மாளை தூஷித்துக்கொண்டே இருப்பாள். ஆனால் அனந்தலக்ஷ்மி அம்மாளுக்கு இதெல்லாம் தெரிந்திருந்தும் வெளியில் காட்டிக்கொள்ளாமல் வெங்கலக்ஷ்மி அம்மாளிடம் எப்போதும் போலவே நடந்துவந்தாள். அனந்தலக்ஷ்மி அம்மாள் தனக்குப் பெண் பிறந்தது முதல் அவளை ராமச்சந்திரன் பெண்டாட்டி என்று சொல்லிவந்தாள். இராமச்சந்திரன் வீட்டிலும் காமேசுரய்யருக்கு தன் மருமகள் பெண்ணைத்தான் கல்யாணம் செய்யவேண்டுமென்ற எண்ணம். இந்த எண்ணம் வர வர இருவர்களுக்கும் அதிகரித்தது. ராமச்சந்திரன் மெட்ரிகுலேஷன் பரிக்ஷைக்குப் போய்விட்டு ஊர் வந்து சேர்ந்தான். காமேசுரய்யருக்கு சீக்கிரம் அவனுக்கு கல்யாணம் பண்ணிப் பார்க்கவேணுமென்கிற ஆசை. ராமச்சந்திரனுக்கு ஜாதகத்தின் மேல் ஜாதகமாய் வந்து குவிந்தது. வெகுபேர்கள் தனிகர்கள் உத்தியோகஸ்தர்கள் ராமச்சந்திரனுக்குப் பெண்ணை கொடுக்கிறதாக வந்து ஜாதகம் கேட்டார்கள். காமேசுரய்யருக்கு சுபாவத்திலேயே மருமகள் பெண்ணை கல்யாணம் செய்து பழய உறவை அதிகப்படுத்த வேணுமென்ற எண்ணம் இருந்தது. மேலும் தான் அதிகமாக கடன் வாங்கிவிட்டபடியால் கிருஷ்ண சாஸ்திரிகள் பணத்தைக்கொண்டு அடைத்துவிடலாம் என்ற கெட்ட எண்ணமும் இருந்தது. இதனால்தான் அவர் கடன் வாங்குவதற்கு அஞ்சவில்லை. இராமச்சந்திரனுக்கு பெண்ணை கொடுப்பதாக வந்தவர்களுக்கெல்லாம் தன் மருமகள் பெண்ணைத்தான் விவாகம் செய்கிறதென்றும் வேறு ஒன்றையும் யோஜிக்கிறதில்லையென்றும் சொன்னார். இப்படியிருக்க ராமச்சந்திரனுக்கு மெட்ரிகுலேஷன் பரிக்ஷை முதல் கிளாஸில் தேறினதாக தந்தி வந்தது. காமேசுரய்யர் இதைக்கேட்டு வெகு சந்தோஷமடைந்தார். உடனே கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு இந்த வருஷமே ராமச்சந்திரனுக்கு கல்யாணம் செய்யவேண்டுமென்றும் ஜாதகத்தைப் பார்க்கும்படிக்கும் சொல்லிக் கடிதம் எழுதி ஜாதகத்தையும் அனுப்பினார். கிருஷ்ண சாஸ்திரிகள் ராமசந்திரன் மெட்ரிகுலேஷன் தேறினதைக் கேட்டு சந்தோஷப்பட்டு காமேசுரய்யர் கடிதத்துக்கு முன்னேயேதான் கலியாண விஷயமாய் கடிதம் எழுத யோஜித்திருந்தார். காமேசுரய்யர் கடிதம் வந்ததும் பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோலிருந்து உடனே ஒரு ஜோஸியரைக் கூட்டிவரச்சொல்லி ஜாதகத்தைப் பார்க்கச்சொன்னார். ஜோஸ்யர் ஜாதகத்தைப் பார்த்து இந்த ஜாதகனுக்கும் இந்தப் பெண்ணுக்கும் இருக்கும் பொருத்தம்போல் ஒருவருக்கும் இராது. நூறு வயதுக்கு மேல்கூட இருவரும் பிரியாமல் பிள்ளைகுட்டியுடன் சௌக்கியமாயிருப்பார்கள். இவளைவிட்டு நீங்கள் எங்கே பிரயத்தினம் செய்தபோதிலும் அது நடக்காது. என்ன ஜாதகம்! உங்கள் அதிருஷ்டத்துக்கு கேழ்க்கவும் வேண்டுமா-பேஷான வரன் அகப்பட்டுவிட்டது என்று இப்படி ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தார். 'கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு வெகு திருப்தியாச்சுது 'ஜோஸியருக்கு ஒரு ஜோடி வேஷ்டி வெகுமதி அளித்து அனுப்பினார். இதையெல்லாம் கேட்ட நாராயண சாஸ்திரிகள் வெங்கலக்ஷ்மி அம்மாளிடம் இதைச் சொல்ல அவள் நன்றாயிருக்கிறது இதைச் சொல்லத்தான் வந்தீர்களாக்கும் என்று ஒரு கூப்பாடுபோட்டாள். நாராயண சாஸ்திரிகள் நடுங்கிப்போய்விட்டார். அவர் வெங்கலக்ஷ்மி அம்மாளிடம் பயப்படுவதற்கு திருஷ்டாந்தமாக ஒன்றை நாம் இப்போது சொல்லவேண்டியது அவசியமாக இருக்கிறது. நாராயண சாஸ்திரிகளுக்கு வீட்டில் எதாவது தனக்குப்பிடித்த பதார்த்தத்தைச் செய்யச் சொல்லவேண்டுமானால் வெங்கலக்ஷ்மி அம்மாள் செய்யமாட்டாள். ஆனால் மாப்பிள்ளை சம்மந்தி இவர்கள் வந்துவிட்டால் வெங்கலக்ஷ்மி அம்மாளுக்கு உத்ஸாகம் வந்துவிடும். உடனே எதாவது நல்ல பதார்த்தம் செய்துவிடுவாள். வெங்கலக்ஷ்மி அம்மாளை வீட்டில் வடை செய்து போடும்படி அவர் வெகுநாள் கேட்டுக்கொண்டிருந்தார். வெங்கலக்ஷ்மி செய்து கொடுப்பதைக் காணோம். அவளுடன் மாப்பிள்ளை ஒருதடவை கோபித்துக்கொண்டு போய்விட்டான். பிறகு இவள் போய் என்ன வருந்தியழைத்தும் அவன் வரவில்லை. அவனுக்கு ஊரிலிருக்கிறவர்கள் வெங்கலக்ஷ்மி அம்மாள்பெண்ணைப்பற்றி அவதூறாக சில மொட்டை பிடீஷனை எழுதிப் போட்டுவிட்டார்கள் மாப்பிள்ளை அதை நம்பி பெண்ணையும் வெங்கலக்ஷ்மி அம்மாளிடமே விட்டுவிட்டுப் போய்விட்டான். பிறகு நாராயண சாஸ்திரிகளும் வெங்கலக்ஷ்மி அம்மாளும் போய் வெகு நல்ல வார்த்தைகளெல்லாம் சொல்லிப் பார்த்தார்கள். அவன் கேழ்க்கவில்லை—கடைசியில் அவனுக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்து அவர் மாப்பிள்ளை கோபத்தைத் தணித்தார். பணம் எந்தக் காரியத்தையும் செய்கிறதல்லவா? அந்த மாப்பிள்ளையும் பணவலையில் அகப்பட்டுவிட்டான. வெங்கலக்ஷ்மி அம்மாள் மாப்பிள்ளையை ஊருக்குக் கூப்

பிட அவர் பிறகு வருவதாய்ச் சொன்னார். நாராயண சாஸ்திரிகள் இதுதான் சமயம் என்று கண்டு ஒருநாள் வீட்டிற்கு ஓடிவந்து வெங்கலக்ஷமி அம்மாளைக் கூப்பிட்டு மாப்பிள்ளை வந்துவிட்டதாகவும் சீக்கிரம் வீட்டிற்கு வருவாரென்றும் வடையில்தான் அவருக்கு நிரமபவும் பிரியம் என்றும் சொன்னார். அவள் உடனே வெகு பரபரப்பாய் வெகு நேர்த்தியான சமையல் செய்து வடைதட்டி ஓர் விருந்துக்கு வேண்டியதெல்லாம் தயார் செய்துவிட்டாள். நாராயண சாஸ்திரிகள் எல்லாம் ஆகிவிட்டதென்று தெரிந்துகொண்டு பிறகு வெளியே போய் பார்த்துவிட்டு வருவதுபோல் போய் திரும்பிவந்து நல்ல மாப்பிளை இவன்! பார்! வந்தவன் இங்கே வராமல் நாலு நாள் கழித்து வருவதாகச் சொல்லிப் போய்விட்டானாம். கிடக்கிறது எல்லாவற்றையும் எனக்குப் போடு என்றார்.

வெங்கலக்ஷ்மி அம்மாள் நீங்கள் பண்ணின மோசயா இது! மாப்பிள்ளை வந்ததாகச் சொன்னால் வடை அகப்படுமென்று பார்த்தீர்களாக்கும். என்னை இப்படி ஏமாற்ற முடியாதென்றுசொல்லி வடையைத்தவிர மற்றதுகளைப் போட்டாள். நாராயண சாஸ்திரிகளுக்கு வெகு அவமானமாய்ப் போயவிட்டது. பிறகு எதார்த்தமாகவே நாலுநாள் கிரமித்து மாப்பிள்ளை வந்துவிட்டான். வெங்கலக்ஷ்மி அம்மாள் முன் தட்டின வடையையே உபயோகப்படுத்தினாள். எல்லோரும் தின்றதுபோக மீதி இரண்டு வடை வெங்கலக்ஷ்மியம்மாள் தனக்கென்று வைத்திருந்தாள். நாராயண சாஸ்திரிகளுக்கு இதைக் கேட்டால் கிடைக்காது என்பது தெரியும். கேட்பதற்கும் பயம். மிச்சம் இருக்கிற வடையில் ஒன்றாவது வெங்கலக்ஷ்மி அம்மாளைக் கேட்டு வாங்கவேண்டுமென்று தீர்மானித்தார். இதற்காக அவளிடம்போய் நாராயண சாஸ்திரிகள் மெள்ள எனக்கில்லையாவென்று முனகினார். அவள் என்ன எனக்கில்லையா என்கிறீர்கள் என்று அதட்டி கேட்டாள். நாராயண சாஸ்திரிகள் மெள்ள வெளியேபோய், உள்ளே எட்டிப்பார்த்து வெங்கலக்ஷ்மி பக்கத்தில் இல்லையென்று கண்டு வடைதாண்டி போ என்று சொல்லி அவள் துரத்தி வருவதற்குள் ஒரே ஓட்டமாய் ஓடிப்போய்விட்டார். இப்படிப்பட்ட பயங்காளி நாராயண சாஸ்திரிகள் வெங்கலக்ஷ்மியிடம் கிருஷ்ண சாஸ்திரிகள் வீட்டு சமாச்சாரத்தைச் சொல்லவும் அவள் போட்ட அதட்டலில் நாராயண சாஸ்திரிகள் வெளியே போய்விட்டார். பிறகு வெகுநேரம் கழித்து வரவும் வெங்கலக்ஷ்மி அமமாள் உங்களுக்கு மச்சுனன் மார்கள் மீது பிரியம் ஏது? அந்த வெங்கிடராமன் உங்களுக்காக எவ்வளவு உழைத்திருக்கிறான். அவன் தம்பி சுப்பன் உங்களுக்கு எவ்வளவு உபகாரம் செய்திருக்கிறான். அவன் பிள்ளைக்கு உங்களண்ணா பெண்ணைக்கொடுத்தால் ஆகாதா, நம்ம வீட்டுசொத்தை காமேசுரய்யர் குடும்பத்துக்கு விட்டுவிட்டு நாம் பார்த்துக்கொண்டிருக்கிறதா என்றாள். நாராயண சாஸ்திரிகள் அவள் நம்மை என்ன கோபித்துக்கொள்ளப்போகிறாளோவென்று பயந்து அது நல்லதுதான் நான் போய் கேட்டு வருகிறேன் என்று புறப்பட்டார்.

வெங்கிடராம சாஸ்திரிகளுக்குத் தம்பியான சுப்பய்யரைப்பற்றி நாம் இதுவரையில் ஒன்றும் சொல்லவில்லை. சுப்பய்யருக்கு அந்தவூரில் காவாலி சுப்பய்யன் என்று பெயர் ஆனால் இவரிடத்தில் ஒரு நல்ல குணம் இருந்தது, வெங்கிடராம சாஸ்திரிகளைப் போல் சி. பால சாஸ்திரி என்று பெயர் வைத்துக்கொண்டு ருத்ராக்ஷம் போட்டுக்கொண்டு அக்ரமம் செய்யவில்லை. இவர் சாஸ்திரி என்ற பெயரையெடுத்துவிட்டு அய்யர் என்று வைத்துக்கொண்டதுமல்லாமல் வளை குடுமி என்ன, சொருக்கு என்ன, 'ஹாப்ஆரம்' என்ன இதுகளுடனே இருப்பார். இவரைப் பார்க்கும்போதே இவர் போக்கிரி என்று அவர் முகம் சாடியம் கூறும். இவர் பேசுவதில் வெகு சாதுர்யமுள்ளவர். வெங்கிடராம சாஸ்திரிகள் ஒருவனை அழுதுகொண்டே கொல்லுவார். காவாலி சுப்பய்யர் சிறித்துக்கொண்டே கொல்லுவார், எல்லோரிடத்திலும் வெகு நயமாகவும் பிரியமாகவும் பேசுவார். அதைமட்டும் நம்பி எவனாவது இவருடன் சேர்ந்தானால் அவனுக்குமண் தான். ஊரில் அனேகருக்கு சகாயம் செய்வதுபோல் காட்டிக்கொண்டு அக்கம் பக்கத்தில் பணவட்டிக்கு கடன்வாங்கி நாட்டுக்கோட்டை செட்டியிடம் இரண்டு வட்டிக்கி வாங்கிவந்ததாகப் பொய்பேசி லேவாதேவி செய்வார். இன்னும் மோசம்போகக் கூடியவர்களாயிருந்தால் 100 ரூபாயைகொடுத்து 200 ரூபாய்க்கு தஸ்தாவேஜ் எழுதி மீதியைப் பிறகு கொடுப்பதாய்ச் சொல்லி பிறகு மோசம் செய்துவிடுவார். குத்தகை சலீசாய் யாரிடமாவது வாங்கி ஏழை குடியானவன்களைக் கூட்டுசேர்த்து அவர்கள் நன்றாய் உழுத்து பலனுக்கு வரும் சமயத்தில் அவன் பேரில் குற்றத்தைச் சுமத்தி பொய்கணக்குகள் எழுதி அவனைத் தள்ளிவிட்டு அவனிடம் தண்டம் பிடித்துவிடுவார். இதுகளைத் தவிர்த்து ஒன்றும் தெரியாதவன் கக்ஷியில் சேர்ந்து அவனுக்கு கடன்களை வாங்கிகொடுத்து வியாஜ்யத்துக்கு இழுத்துவிட்டு அவனை பாபர் செய்து தான் லாபம் அடைவதும் உண்டு. பொய்சாக்ஷி சொல்வதைப் பற்றி நாம் சொல்லவேண்டியதேயில்லை. அது அவருக்கு தீர்த்தம் குடிப்பது எவ்வளவு சகஜமோ அவ்வளவு சகஜம். இங்கிலீஷ்காரன் கோர்ட் ஆதலாலும் அங்கே நம்மஸ்வாமி இல்லாததாலும் என்ன பொய்சத்யம் செய்தாலும் அது நம்மை ஒன்றும் செய்யாதென்று சொல்லிக்கொள்வார். இப்படிப் பட்ட காவாலி சுப்பய்யருக்கு இவரைப்பார்க்க அதிகப் போக்கிரித்தனமுள்ள பிள்ளை ஒருவன் இருந்தான். அவன் கிருக்குச் சடாவையும், சாந்துபொட்டையும் புதுச்சேரி வஸ்திரத்தையும் பார்த்தவர்கள் இவன் ட்ராமாக்காரனோ என்று சந்தேகிப்பார்கள். இவனுக்கு மெட்ரிகுலேஷன் நாலுவருஷம் தேறவில்லை. திருச்சினாப்பள்ளியில் முதல் வருஷம் பரிக்ஷைக்குப் போனான், இரண்டாவது வருஷம்

கோயமுத்தூரில் நடந்தது, மூன்ருவது வருஷம் மதுரையில் நடந்தது, நான்காவது சேலம். இன்னும் பகவான் மட்டும் அவனுக்கு ஆயிசுப் பூராவாகக்கொடுத்திருக்கும் பக்ஷத்தில் அவன் சென்னை ராஜதானி 22 ஜில்லாக்களிலும் மெட்ரிகுலேஷன் பரிக்ஷைக்குப்போவதில் சந்தேகமில்லை. இருபத்திரண்டு ஜில்லாவும் தீர்ந்துவிட்டால் பிறகு சர்க்காரில் அதிக ஜில்லா ஏற்படுத்தவில்லையே போனஜில்லாவுக்கே மறுபடியும் போகிறதா என்றும் விஜாரப்படுவான். இவனுக்கு வயது பதினெட்டு இதற்குள் இவன் பாராததாசி. கிடையாது இப்படிப்பட்ட தன் அருமையான தன் சகோதிரன் பிள்ளைக்கு கிருஷ்ண சாஸ்திரிகள் பெண்ணை கொடுக்கவேண்டுமென்று வெங்கலக்ஷ்மி அம்மாள் நாராயண சாஸ்திரிகளை கிருஷ்ண சாஸ்திரிகளிடம் அனுப்பினதுமல்லாமல் தானும் அனந்தலக்ஷ்மி அம்மாளிடம் போய் சிபார்சு செய்தாள். அனந்தலக்ஷ்மி அம்மாளுக்கு சுப்பய்யன் பிள்ளை சமாசாரமெல்லாம் தெரியும். அவள் இதையெல்லாம் காட்டிக்கொள்ளாமல் கல்லியாணம் முன்னமேயே நிச்சயமாகி விட்டது. இனி என்ன செய்கிறது என்ருள். கிருஷ்ண சாஸ்திரிகளும் அப்படியே சொல்லிவிட்டார். வெங்கலக்ஷ்மி அம்மாளுக்கு இந்த சம்மந்தம் பிடிக்கவேயில்லை. வீணில் கிருஷ்ண சாஸ்திரிகள் சொத்து வெளியில் போகிறதே தாங்கள் வேறு கோத்திரமாயிருந்து தன் புருஷன் கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு சகோதிரராக இல்லாமல் தான் இருந்தாரா என்று விஜாரப்பட்டாள். தனக்குத்தான் அந்த சொத்துகிடைக்க பிராப்தியில்லை, தன் தம்பி பிள்ளைக்காவது கிடைக்காதா என்று ஏர்பாடு செய்யப்பார்த்தாள். அதுவும் பலிக்காமல போனது கண்டு அனந்தலக்ஷ்மி அம்மாளை இன்னும் அதிகமாக தூஷிக்க ஆரம்பித்தாள். பிறகு கிருஷ்ண சாஸ்திரிகள் காமேசுரய்யருக்கு ராமசந்திரன் ஜாதகம் சரியாக இருப்பதாகவும் அந்த வருஷமே கல்யாணத்தை முடிக்கவேண்டுமென்றும் எழுதினர்.

## Extract.

## இணக்கமும் நிதர்சனமும்

"நல்லாரோடு இணங்கு, நீ அவர்களில் ஒருவன் ஆவாய்"—ஜார்ஜ் ஹெர்பர்ட்.

"என்மட்டுக்கு, நான் கௌரவமான புருஷர்கள் மூலம் கற்பதில் சந்தோஷமுடையவனும்வேன்"—ஷேக்ஸ்பியர். "நிதர்சனங்கள் கண்ணிற்கு போதிக்கின்றன. ஆகையால் உங்களுடைய முடிவைப் பற்றி கவனியாதீர்; ஆனல் உங்கள் நாளை எவ்வாறு போக்குகிறீர் என்பதைக் கவனியுங்கள்"—ஷேக்ஸ்பியர்.

"சித்திரவேலையிற் கைதேற விரும்புகிறவன் மிக நேர்த்தியான படங்களைப்பார்த்து வரையவும், அவன் முன்னர்க்காணப்படுகிற நல்ல மாதிரிகளைக் கண்டு தன் சித்திரக்கோலால் ஒவ்வொரு அடையாளத்தையும் தீட்டவும் நிச்சயங்கொண்டவனுயிருப்பன்; அவ்வாறே, தன் ஒழுக்கத்தின் நீதிகள் நல்லனவாக இருக்க விரும்புகிறவன், தனக்கு நல்ல நிதர்சனங்களைக் கோரிக்கொள்வதில் ஜாக்கிரதையாயிருப்பன். அவற்றிற்குச் சமானமாகிற அளவும் அல்லது அவற்றை மிஞ்சுகிறவரைக்கும், ஒருபோதும் சும்மா இரான்."—ஜவன்பெல்தாம்.

வீட்டில் வைத்துண்டாகிற இயற்கையான சிக்ஷையானது வாழ்நாளில் வெகுதூரம் நீடிக்கின்றது; மெய்யாகவே அது ஒருக்காலும் முற்றும் ஒழிந்துவிடுகிறதில்லை. வயது ஆக ஆக, ஒழுக்கத்தை உருப்படுத்துவதில் பிரயோகித்த வீட்டின் வகைசக்ராதிபத்யமானது நிலைக்கத்தக்க சமயம் உண்டாகிறது. அப்பால் கல்விச்சாலையினின்றும் சிநேகிதர் தோழர்களுடைய இணக்கத்தால் எழுகிற, பெரிதும் செயற்கையான சிக்ஷையானது தொடுத்துக்கொள்ளுகின்றது. அது திருஷ்டாந்தத்தின் வலிமை பெற்ற சக்தியால் ஒழுக்கத்தை உருப்படுத்தா நின்றது.

இளைஞரும் முதியோரும்—ஆனல் அவருள்ளும் விசேடமாய் முதியோரினும் இளைஞர்கள்—தாங்கள் கூடுகிறவர்களைக் கண்ட பாவனை செய்யாமல் இரார்கள். ஜார்ஜ் ஹெர்பர்ட்டின் மாதா தன் புத்திரரை நடத்துவதற்கு வேண்டிக்கற்பித்த வாக்கியம் வருமாறு:—"நமது சரீரங்கள் நாம் பஜிக்கிற இரைசசிக்குத்தக்கவண்ணம் விருத்தியடைகிறது போல, நம் ஆன்மாவும், நல்ல அல்லது கெட்ட சங்கத்தின் ஒழுக்கம் அல்லது சம்பாஷணையால் யோக்கியதை அல்லது அயோக்கியதையைத் தன்னறியாதே கிரஹித்துக் கொள்ளுகின்றது."

உள்ளவாறே நம்மைச் சூழ்ந்தவர்களின் உறவானது, ஒழுக்கத்தை உண்டாக்குவதில் பலத்தபயனை உறுவியாமற்போகாது. ஏனெனின், மனிதர் இயல்பாகவே கண்டபாவனை செய்பவர். சகலமனிதர்களும் தங்கள் கூட்டாளிகளின் பேச்சு, நடை, உடை, பாவனைகளாலும் ஆலோசனைகளாலுங்கூட ஏறக்குறைய அழுந்தப்பெற்றவராகின்றனர். நிதர்சனமானது பயனற்றதா? சகலமும் அதுதான். "நிதர்சனமானது மனிதருக்குக் கல்விச்சாலையாகின்றது. அவர்கள் வேறொன்றிலும் கற்றுக்கொள்ளார்" என்று பார்க் கூறினர். 'ராக்கிங்ஹாம் மார்க்குவிஸ்'க்காக அவர் எழுதிய கௌரவமான நீதிமொழியாவது; "ஞாபகப்படுத்து அனுகாணம்செய்; உலைவின்றி முயலு" என்பதேயாம.

கண்டு-பாவித்தலானது அதன்பயன் கவனிக்கத்தகாதவாறு பெரும் பாலும் தன்னையறியாதே சம்ப

விக்கின்றது. ஆனால் அதுகாரணம்பற்றி அதன் பயன் நிலைபெற்றதென்பதில்லை. அழுந்தச் செய்யும் இயல்புடையோர், அழுந்தப்பெறும் இயல்பினர்பால் உற்றால்மாத்திரம், ஒழுக்கத்தின் மாறுதலானது தெரியக்கூடியதாகின்றது. மிகவும் துர்பலமான சுபாவமுள்ளோருங்கூட, தங்களைச் சூழ்ந்தவர்களிடம் கொஞ்சம் பலனை உண்டாக்குகிறார்கள். உணர்ச்சி, ஆலோசனை, வழக்கம் இவற்றின் தொடர்பானது நிலைத்ததாயும், நிதர்சனத்தின் செய்கையானது, ஒழிவிலதாயும் இருக்கின்றன.

விருத்தரான நாயகநாயகிகள் அல்லது சில வருடங்கள் ஒருவீட்டில் கூடி வசித்திருப்பவர்களுங்கூட நாளடைவில் ஒருவரைப்போலொருவர், ஒத்த சுபாவமுடையவராகின்றனர். ஆகையால் அவர்கள் பேரீதமானபடி நெடுங்காலம் வசிக்கிறதானால், அவர்களைப்பிரித்து அறியமுடியாது. விருத்தாப்பியர்கள் விஷயத்திலேயே இவ்வாறாயின், அதிக மிருதுவும், அழுந்தப்பெறத்தக்கதும், தங்களைச் சுற்றிலுமுள்ளவர்களுடைய நட்புச்சம்பாஷணையின் லக்ஷணத்தைக் கொள்ளத்தக்கதுமான குழைவுள்ள சுபாவத்தையுடைய இளைஞர் விஷயத்தில் அது எவ்வளவு விசேடமான பொருத்தமுடையது என்று எமர்சன் சொல்லியிருக்கிறார்.

“கல்விகற்பித்தலைப்பற்றி மிகுதியும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சர்வவியாபகமாயுள்ள நிதர்சனத்தைப்பற்றிக் கவனியாததாகத் தோற்றுகிறது. என்னுடைய சகோதரர்களால் காட்டிய நிதர்சனமானது எனக்கு விசேஷமான கல்வியாயிருந்தது. என்னுடைய குடும்பத்தாரிட மெல்லாம் உண்மையான சுவாதீனமாகிய தற்சார்பான குணமிருந்தது. அதைப்பார்த்து நான் அக்குணத்தை அடைந்தேன்” என்று ஸர் சார்லஸ் பெல் என்பவர் தமமுடைய கடிதங்களுள் ஒன்றிற் கண்டிருக்கின்றனர்.

ஒழுக்கத்தை உருவமாக்குதற்குரிய சந்தர்ப்பங்கள் வயசு வளருகிறகாலத்திலேயே முக்யமாய் சம்பவித்தல் வேண்டுவது இயல்பு. வயசாகவே நிதர்சனமும் கண்ட பாவனையும் ஆசாரமாக ஏற்பட்டுவரவர சுபாவத்திற் கலந்து விடுகின்றது. நாம் அதனையறியுமுன்னரே நம்மை அது வசப்படுத்தும்படியான அவ்வளவு சக்தியுடையதாயிருக்கின்றது.

ஒரு சந்தர்ப்பத்தில் ஒரு பையன் ஒரு புத்திஹீனமான விளையாட்டு விளையாடினதற்கு பிளேட்டோ என்பவர் அவனைக்கண்டித்தது வருமாறு:— “மிகவும் அற்பமான காரியத்திற்காக நீர் என்னைக் கண்டிக்கிறீர்” என்று அந்தப்பையன் சொன்னான். “ஆனால் வழக்கமானது சிறியபொருள் அன்று” என பிளேட்டோ மறுமொழி தந்தனர். சுபாவத்துடன் கலந்த கெட்ட வழக்கமானது, மனிதர் தாங்களே நிந்திக்கிறதுன்மார்க்கங்களைத் தாங்களே பற்றிக்கொண்டிருக்கும்படியான அவ்வளவு கொடுமையுடையதாயிருக்கின்றது அவர்கள் வழக்கத்திற் பராதீனப்பட்டு அவற்றின் சக்தியை மீறத்திராணியற்றவராகின்றனர். இதனால்வழக்கமென்னும் ராஜ்யத்துடன் போராடத்தகுதியுள்ள மனவூக்கத்தை உண்டாக்கிவகித்துக்கோடலானது சன்மார்க்கசிக்ஷையின் ஓர் முக்யபயனாக மதிக்கப்படும் என்று லாக் என்பவர் கூறியிருக்கின்றனர்.

நிதர்சனத்தால் உண்டாம் ஒழுக்கத்தின் பயிற்சியானது பெரும்பான்மையும் தானே தன்னையறியாமல் எழுந்த போதிலும் இளைஞர்கள் தம்மைச்சூழ்ந்தவர்களை அமைதியுடன் பின்பற்றவாவது பார்த்துப் பழகவாவது செய்தேதீரவேண்டுமென்பது அவசியமின்று. தங்கள் கூட்டாளிகளின் நடக்கையைவிட வெகுதூரம் தங்கள் சொந்த நடக்கையானது, தம் வாழ்நாளின் நோக்கத்தைக்குறித்துக்கொள்ளவும் ஒழுக்கத்தை உருவாக்கிக்கொள்ளவும் இடந்தருகின்றது. ஒவ்வொருவனும் தன்னிடத்தில் மனோசக்தியும் சுவாதீன காரியசக்தியும் உடைத்தாயிருக்கின்றான். அதைத்தைரியத்துடன் பழக்கினால் தனக்குத்தானே இஷ்டர்களையும் தோழர்களையும் தெரிந்தெடுக்கும் திறமை உண்டாகும். இளைஞரும், முதியோரும் பலத்தமனக்கொள்கையின்மையினாலேதான், தங்கள் மனப்போக்கிலே போகின்றனர்; அல்லது மற்றவர்களைப்பார்த்து நடந்துகொள்ளும்படியான இழிவை எய்துகின்றனர்.

மனிதர் தாம் சார்ந்த இனத்தாரால் அறியப்படுகின்றனர் என்பது சாதாரணமான வாக்கியமாயிருக்கிறது. குடியில்லாதவர் குடிகாரருடனாவது, நாகரீகமுற்றவர் நாகரீகமற்றவருடனாவது, சன்மார்க்கர் துன்மார்க்கருடனாவது கூடுவது இயற்கையன்று. கெட்ட மனிதர்களுடன் சேர்வதானது இழிவான குணத்தையும் துன்மார்க்கமான மனோசுபாவத்தையும் காட்டுகின்றது. அவர்களுடைய கூட்டத்திற்கு அடிக்கடி போவதானது நல்லொழுக்கத்திற்கு நிச்சயமான குறைவை உண்டாக்குகின்றது. அவர்களுடன் பேசுதலானது மிகவும் கெடுதல் உண்டாக்கத்தக்கது. ஏனெனின், உடன்கையில் தீங்கைச் செய்யவில்லையானாலும் அது மனசில் அவ்விதை போட்டு, நாம்பேசி நீங்கியபின், நம்மைத்தொடர்ந்து வருகின்றது. நிச்சயமாகவே மறுபிறப்பில் உண்டாக்கத்தக்க ஒட்டுவியாதியாகின்றது.

இளைஞர்கள் தங்கள் விவேகஞானசக்தியால் நடத்தப்பட்டுத் தங்கள் மனச்சான்றிற்கேற்பத் தங்களுக்குரியசுவாதீன மனோசக்தியைப் பிரயோகிப்பரேல், அவர்கள் தங்களைவிட நல்லவர்களுடைய கூட்டத்தை விரும்பி, அவர்களுடைய நடக்கையைப்பார்த்து நடக்க யத்தனப்படுகின்றனர். நல்லவர்களுடைய இணக்கத்தால் விருத்தியடையத்தக்க சுபாவங்களுக்கு நலம் சான்ற புஷ்டியுண்டாக்கும். ஆனால் கெட்டவர்களுடைய இணக்கமானது தீங்காகவே முடியும். கார்கேன்டியூய், உடைய படிப்பைப் பற்றி, ரேபிலேஸ் சொல்லுகிறபடி நாம் அறிகிற சில மனிதர்களை நேசித்து, கனப்படுத்தி, புகழவேண்டியதுண்டு. பின்னும் சிலரை விலக்கி இகழவேண்

டியதும் உண்டு. சிறந்த ஒழுக்கமுடையோருடன் வசித்தால், நீ சிறந்தவனாகவும் அவர்களிடத்தில் பிரகாசத்தைப் பெற்றவனாகவும் உன்னை அறிவாய். ஸ்பேனிஷ் பழமொழிப்படி "ஓநாயுடன் நீ வசித்தால் ஊளையிடத்தான் நீ படிப்பாய்."

சாதாரணமாயுள்ள தன் காரியக் குட்டிகளுடன் சம்பாஷணை செய்வதுகூட மிகவும் கெடுதலாய்ப் பலிக்கும். ஏனெனில் உண்மையான ஆண்தன்மைக்கும் மனவீதியாகிய ஒழுக்கத்திற்கும் ஏறக்குறைய விரோதமாய், கொடூரமும், மந்தமும், அகம்பாவமும், தன்னயம் பாராட்டலுமாகிய மனோசுபாவத்தைக் கொடுக்கின்றது. மனம் ஒடுங்கியதால வழிஒடச் சீக்கிரம் பழகுகின்றது. தயாகுணமானது இறுகிச்சுருங்கிவிடுகின்றது. நீதி சுபாவமானது துர்ப்பலப்பட்டு தீர்மானமின்றி வந்ததற்கெல்லாம் இடங்கொடுக்கின்றது. ஆகவே, உதாரம் பொருந்திய கௌரவம் அல்லது உண்மையான நற்குணம் அனைத்திற்கும் கேடுவிளைக்கின்றது.

ஆனால் நம்மை விட அதிக புத்தியும், நன்மையும், அனுபவமு முள்ளவர்களுடன் கூடினால் ஏறக்குறைய மன ஊக்கமும் தைரியமும் எப்போதும் உண்டாம். நம் வாழ்நாளைப்பற்றிய ஞானத்தை நமக்கு அவர்கள் அதிகப்படுத்துகிறார்கள். நம்முடைய யோக்கியதையின் மதிப்பை அவர்களால் திருத்திக்கொண்டு அவர்களுடைய ஞானத்திற்கு நாமும் பாகஸ்தாகின்றோம். அவர்களுடைய கண்ணைக்கொண்டு விஷயங்களை நாம் விசேஷமாய் அறிகிறோம். அவர்களுடைய அனுபவத்தைக் கொண்டு லாபம் அடைகிறோம். அவர்கள் அனுபவித்தை சுகத்திலிருந்து மட்டுமன்று, அதனினும் அதிகமாய், அவர்கள்பட்ட கஷ்டங்களினின்றும் அறிவையடைகிறோம். நம்மினும் அவர்கள அதிக பலிசாலியானால் அவர்களுடைய பலத்தில் நாமும் பாகமடைகிறோம். ஆதலால் புத்தியும், பலமும் உள்ளவர்களுடன் கூடுதலானது ஒழுக்கத்தை உருப்படுத்துவதில் மிகவும் மதிக்கத்தக்க பயனை அடைவிக்க ஒருக்காலும் தவறமாட்டாது. அது நம்முடைய சாதனங்களை அதிகப்படுத்தி, நம்சொந்தக்காரியங்களில் மிக்க சாமர்த்தியத்தையும். திறமையையும், பிறர்காரியங்களில் பயனுள்ள உபகாரத்தையும் செலுத்தும்படிக்கான சக்தியைக் கொடுக்கின்றது.

"என் குழந்தைப்பருவத்தில் நான் தனித்திருந்ததால் உண்டாயிருக்கிற மிகுந்த நஷ்டத்தைப்பற்றி எனக்குள்ளே அடிக்கடி மிகவும் துக்கப்பட்டிருக்கின்றேன். கல்வி கேள்வியில்லாத நம் சொந்த அறிவைவிட மிகவும் கெட்ட துணை நமக்கு வேறு வேண்டுவதில்லை. தனிமையாயிருப்பதால் தன் இனத்தாருக்கு உதவிசெய்யும் மார்க்கத்தை முற்றும் அறியாதவனாகிறதுமட்டுமன்று; பிறருடைய உதவி தனக்குவேண்டிய குறைகளைக் காணக்கூடாமலுமிருக்கிறான். தனித்திருக்கச் சாவகாசமின்றெனதவாறு, பிறருடனே கூடுதலானது ஓர் மனுஷனுக்குப் பெருகியவளமுள்ள அனுபவஞானத்தை மென்மேலுந் தருவதாக மதிக்கப்படும். இவ்வாறு கிரஹித்த சிநேகமானது அறத்தைப்போலாது வெளியே உண்டானபோதிலும் வளமான பலனைத் திரும்பத் தனக்குக்கொண்டுவாராமற் போகாது. மற்றவர்களுடன் கூடுவதால் ஒழுக்கம் பலப்படுகின்றது. நம்முடைய பிரதான நோக்கத்திற்குக் கெடுதலின்றி நம் மார்க்கத்தை விவேகத்துடன் நன்கு கண்டுணர்ந்து கொள்ளச் சக்தி உண்டாகிறது" என்று ஸ்சிம்மெல்பென்னிக் என்பவர் சொல்லுகிறார்—செந்தமிழ்.

---

## TO OUR SUBSCRIBERS.

## நமது சந்தாதாரர்களுக்கு.

இப்பொழுது நடந்துவரும் அர்பத்நட் இன்ஸால்வென்ஸி விஷயமாய் ஏழைகள் பணம் முழுவதும் மோசம்போய் விடும்போலிருப்பதன்றி, ஏழைகளை மோசம் செய்த பாதகர்களும் நழுவி விடுவார்கள் போலிருப்பதால் அதைப்பற்றி வேண்டியமுயற்சி யெடுத்துக் கொண்டுழைக்க வேண்டிய தவசியமாய் நேரிட்டது. அதனால், மற்றெல்லா வேலைகளையும் விட்டு அதேவேலையாக இருந்துழைத்து வருகிறோம். இதனால் இந்த விவேகசிந்தாமணி வேலையும்தற்காலத்துக்குத் தடைப்பட்டிருக்க நேரிட்டது. அடுத்த சஞ்சிகை முதற்கொண்டு இப்பத்திரிகை தக்கவர்கள் மேற்பார்வையில் ஜனங்கள் எல்லாருக்கும் மிகவும் உபயோகமாயிருக்கும்படி எளிய நடையில் மிகவும் இனிமையாக விருக்க நடத்தப்பட்டுவரும். இடையில் நேர்ந்த இடையூறுக்காக இதை வாசிப்போர் நம்மிடத்து க்ஷமை பாராட்ட வேணுமாய்க் கேட்டுக்கொள்கிறோம்.

27/2/07. அ. ப. ஏஜன்ஸி காரியதரிசி..

---